Registered No. M. 1500.

'NAVASAKTI'

# நவசக்தி

| சந்தா விவரம் | ரு. அ. |
| --- | --- |
| வருட சந்தா ... ... | 5 0 |
| ஆறுமாத சந்தா ... ... | 3 0 |
| வெளிநாடு-வருட சந்தா ... | 6 0 |

வாரப்பதிப்பு

“எவ்வுயிர்க்கும் அன்பாயிரு”

| விளம்பர விகிதம் | |
| --- | --- |
| பத்தி 1-க்கு வாரம் 1-க்கு ரூபா | 7 0 |
| சில்லரை விளம்பரம் 1 அங். | 0 8 |

முன்பணமின்றி விளம்பரஞ் செய்யப்படமாட்டாது.

சிலம்பு கூ — விபவஹூ கார்த்திகைமீ சூஉ (21—11—28) புதன்கிழமை — பரல் ரு

## ஆசியாவின் எழுச்சி

### நாகரிகப் போர்

“கண்டெம்பொரரி ரிவியூ” என்னும் பிரிட்டிஷ் மாதப் பத்திரிகையில் இளவரசர் ஏ. லொபானுவ் ராஸ்டாவ்ஸ்கி என்பார் எழுதியுள்ள கட்டுரையின் சாரம் வருமாறு :—

ஆசியாவுக்தும் ஐரோப்பாவுக்கும் உள்ள சம்பந்தமே வருங்காலத்தில் மகா முக்கியமான அரசியல் பிரச்னையாயிருக்குமென்பது நாளுக்குநாள் தெளிவாகி வருகிறது. யுத்தத்திற்கு முன்பு சாதாரணமாக (மேனாட்டு) ஜனங்களின் மனதைக் கவர்ந்தவை ஜெர்மனியின் எழுச்சி, துருக்கியின் வீழ்ச்சி முதலியவைகளாகும். ஆனால் இப்போது எழுந்திருக்கும் மகத்தான ஆசியப் பிரச்னையின் முன்பு அவைகளெல்லாம் சூரியன் முன்பு மின்மினி போன்றவையேயாம். ஆசியா வாசிகளான எண்பது கோடி மக்கள் உலகில் தங்களுக்குரிய இடத்தை ஐரோப்பியர் திருடிக் கொண்டதாகச் சரியாகவோ, தவறாகவோ, அபிப்பிராயங் கொண்டிருக்கின்றனர். எனவே, இவ்விஷயத்தைப்பற்றி நன்கு ஆராய்ந்து தெளிவாக உணர்ந்து கொள்ளுதல் இன்றியமையாததாகும்.

* * *

தற்போது ஆசியாவில் ஏற்பட்டிருக்கும் அமைதியின்மை, ஆசியர்கள் நெடுங்காலந் தூங்கியிருந்து ஐரோப்பிய நாகரிகத்தின் முட்டுதலினால் திடீரென்று கண் விழித்துக் கொண்டதின் பயனாக ஏற்பட்டதென மேனாட்டார் சாதாரணமாகக் கருதுகிறார்கள். ஆசியாவின் சரித்திரத்தை நன்காராய்ந்தால் இக்கருத்து முற்றும் தவறானதென்பது புலனாகும். ஆசியாவின் வளர்ச்சியில் தற்போதைய நிலைமையை நன்கறிந்து கொள்ளவேண்டுமானால் நாம் பதினேழாம் நூற்றாண்டின் இறுதிக் காலத்திற்குச் செல்லவேண்டும். அச்சமயம் ஐரோப்பிய நாகரிகம் பின்னால் உலகப் புரட்சிக்குக் காரணமாயிருந்த இயந்திரவளர்ச்சித் துறையில் இன்னும் இறங்கிவிடவில்லை. ரோம சாம்ராஜ்ய காலத்திற்குப் பின்னர், என்றும் அறிந்திராத பெருமிதமும் வலிமையும் ஐரோப்பா பெற்றிருந்ததாயினும், வாழ்க்கையின் வெளிப்படையான அம்சங்கள் அப்புராதன காலத்திலிருந்து பெரிய மாறுதல் எதுவும் அடைந்துவிடவில்லை. இரண்டாவது சார்லஸின் ஆட்சியின்கீழிருந்த மக்கள் ரோம ராஜ்ய வாசிகளை விட வீட்டிலோ, பிரயாணத்திலோ, அதிக வசதிகள் பெற்றிருந்ததாகச் சொல்ல முடியாது. ஆனால் ஆசியாவோ இக்காலத்தில் அரசியல் வளர்ச்சியிலும், நாகரிகச் சிறப்பிலும் மகோந்நத நிலையடைந்திருந்தது.

* * *

பதினேழாம் நூற்றாண்டின் இறுதியில் சீனத்தில் காங்ஷி சக்கரவர்த்தி சிறப்புடன் செங்கோல் செலுத்தி வந்தான். சீனநாட்டின் பெயர் பெற்ற மன்னர்களுக் குள்ளே இவன் இரண்டாவது பதவி பெறற் குரியவனாவான். அவன் துருக்கிஸ்தானத்தையும், திபேத்தையும் வென்று தன் ஆட்சியின் கீழ் கொண்டுவந்தான். விசால இதயம்படைத்த அம்மன்னனின் தலைமையில் கைத்தொழில்களும் அருங்கலைகளும் சீனத்தில் செழித்தோங்கின. ஜெஸூட்டுகள் என்னும் ரோமன் காதலிக் கிறிஸ்துவர்களுக்கு அவன் பாதுகாப்பு அளித்தது அவனுடைய சமரசப் பான்மையைப் புலப்படுத்தும். அவனுடைய மேற்பார்வையில் பெயர்பெற்ற சீன சாம்ராஜ்ய அகராதி தயாரிக்கப்பட்டது. பதினாயிரம் புத்தகங்கள் அடங்கிய சகலகலைப் பொக்கிஷம் ஒன்று சேகரிக்கப்பட்டது. சாலைகளும், கால் வாய்களும் நிர்மாணிக்கப்பட்டன. 1723ம் ஆண்டில் அவன் காலஞ்சென்றபோது “உலகிலேயே அவனுடைய சாம்ராஜ்யந்தான் இராஜ்ய விஸ்தாரத்திலும், ஒழுங்குபெற்ற ஆட்சியிலும், நாகரிக வளர்ச்சியிலும் தலைசிறந்து விளங்கிற்று” என்று ஆசிரியர் ஸூட்ஹில் என்பார் சொல்கிறார்.

* * *

இந்தியாவில் அப்போது, மொகலாயப் பெரு மன்னர்களில் கடைசியானவனான அவுரங்கசீப் ஆட்சி புரிந்து வந்தான். மொகலாய சாம்ராஜ்யம் அக்பர் காலத்தில் உற்றிருந்த சிறப்பும் மகிமையும் இப்போது பெற்றிருக்க வில்லையாயினும் இன்னமும் அதன் பெருமையை அடியோடு இழந்துவிடவில்லை. இரத்த வெள்ளம் ஓடிய சில நூற்றாண்டுகளுக்குப் பின்னர் மொகலாய வம்சத்தின் ஆட்சியில் இந்தியா குப்த சாம்ராஜ்யத்தின் போது அடைந்திருந்த செல்வமும் செல்வாக்கும் மீண்டும் எய்திச் சிறந்தோங்கிற்று.

* * *

பாரசீகத்தில் அப்பாஸ் என்னும் பெயர்பெற்ற அரசன் காலஞ்செல்ல, அவனுடைய ஸ்தானத்திற்குப் “பாரசீக நெப்போலியன்” எனத்தகும் நாதிர்ஷா வந்திருந்தான். துருக்கியோ, 1683ல் வியன்னு நகருக்கருகில் நேர்ந்த தோல்வியினால் திக் விஜயத்தில் தடைப்பட் டிருப்பினும், இன்னமும் உந்நதநிலையிலேயே இருந்து வந்தது.

* * *

இவ்வாறு, பதினேழாம் நூற்றாண்டின் இறுதியில், ஆசியாவின் நான்கு பெரும் சாம்ராஜ்யங்களும், பொதுவாக ஆசிய நாகரிகமும், மகோந்நத நிலையிலிருப்பதைக் காண்கிறோம். அக்காலத்திற்குப் பின்னர் இப்போது இரண்டு நூற்றாண்டுகள் தான் சென்றிருக்கின்றன. இந்தச் சிறு காலத்திற்குள்ளாக ஆசிய மக்கள் தங்கள் பண்டைப் பெருமையின் ஞாபகங்களையெல்லாம் மறந்து, ஐரோப்பியருடைய தொடர்பினால் தாங்கள் தாழ்ந்தவர்களென்னும் மனப்பான்மை கொள்ளுதல் இயலாததாகும்.

ஏறக்குறைய இதே காலத்தில்தான் ஆசியாவுக்கும், ஐரோப்பாவுக்கும் திட்டமான தொடர்பு ஏற்பட்டதென்பதையும் கவனித்தல் வேண்டும். கிழக்கிந்தியக் கம்பெனியார் 1612-ம் ஆண்டிலேயே இந்தியாவுடன் வியாபாரம் செய்யத்தொடங்கினார்களாயினும், 1690-ல்தான் கல்கத்தாவில் இடம்பெற்றார்கள். சீனத்தைச் சேர்ந்த காண்டனில் முதன் முதலில் ஆங்கிலேயருக்கு இடங் கிடைத்ததும் 1699-ல் தான். அப்போது இவ்விரு கண்டங்களுக்குள்ளும் ஏற்பட்டிருந்த தொடர்பு எத்தகையதென்பதை இதுகாலை நாம் ஒருவாறு பொது நோக்காகக் காணுதல் கூடும். நாகரிகங்களைப் பொறுத்த வரையில் இரண்டும் சம நிலையிலிருந்தன வென்றேனும் குறைந்த பட்சம் ஒப்புக்கொள்ள வேண்டும். உண்மையில் ஆசியாவே சிறிது முன்னால் நின்றது என்று கூறலாம். ஆனால் இரண்டு நாகரிகங்களும் வெவ்வேறானவையாயினும் ஒன்றோடொன்று முட்டுதலின்றிச் சமவேகத்துடன் முன்னேறிக் கொண்டிருந்தன. அக்காலத்தில் ஐரோப்பாவுக்கு வந்த ஆசியத்தூதன் ஒருவன் தன்னைச் சுற்றியுள்ளவர்களினும் தான் தாழ்ந்தவன் என்று எண்ணியிருக்க மாட்டான். அவ்வாறே டில்லி இராஜ சபைக்கோ, சீனமன்னனின் தர்பாருக்கோ சென்ற ஐரோப்பியத் தூதன் அந்நாட்டினரைக்காட்டுமிராண்டிகளெனக் கருதியிருக்கமுடியாது. ஆசிய நாகரிகத்தின் அழகான புறத்தோற்றத்துக்குப் பின்னால் இரத்த வெள்ளம் நிரம்ப ஓடிற்றேயென்றால் அப்போது ஐரோப்பாவின் நிலையென்ன? பார்த்தொலோமியூ படுகொலை, யூதர்களின் படுகொலை, புரோடஸ்டாண்டுகளின் சித்திரவதை முதலிய பயங்கரக் கொடுமைகள் பல அப்போதுதான் ஐரோப்பாவில் நிகழ்ந்திருந்தன.

* * *

இவ்வாறு ஆசியாவும், ஐரோப்பாவும் ஏறக்குறைய சமநிலையில் சந்தித்த பின்னர் நிகழ்ந்ததென்ன? ஆசியாவைப் பொறுத்தவரையில் அசாதாரணமான காரியம் எதுவும் நடக்கவில்லை. தனக்கியல்பாயுள்ள மெதுவான, நிதானமான முறையில் அது வளர்ச்சியுற்றுக் கொண்டு வந்தது. சீனம் மஞ்சு வம்ச மன்னர்களின் கீழ் நல்ல நிலையிலேயே இருந்து வந்தது. இந்தியா, அதன் சரித்திரத்தில் அடிக்கடி நாம் காண்பது போல, மகோந்நத நிலைக்குப் பின்னர் சிறிது தாழ்மையுற்று,மீண்டும் உயர்நிலையடையத் தன் சக்திகளைத் திரட்டி வந்தது.பாரஸீகமும், துருக்கியும் படிப்படியாக வீழ்ச்சியுற்று வந்தன. இவையெல்லாம் ஆசியாவின் சரித்திரத்தில் சாதாரண சம்பவங்களே யாகும்.

அங்ஙனமாயின், இவ்விருபெருங் கண்டங்களின் சம்பந்தத்தில் பின்னால் பெருங் குழப்பத்தை உண்டுபண்ணி, ஆசிய நாகரிகத்துக்குக் கேடு சூழ்ந்து, தற்போது ஆசியாவில் எழுந்திருக்கும் விரோத உணர்ச்சிக்கும் காரணமானது எது? தொழில் புரட்சியினாலும், இயந்திர வளர்ச்சியினாலும் ஐரோப்பாவில் ஏற்பட்ட பெரு மாறுதல்களே காரணமாகும். இதற்கு முன்னால் மக்கட்குலத்தின் சரித்திரத்தில் இத்துணை விரைவாக இவ்வளவு பெரும் மாறுதல்கள் எப்போதும் ஏற்பட்டதில்லை. இவை காரணமாக ஐரோப்பாவில் ஒரு தார்மிகப் புரட்சியும் ஏற்பட்டு, ஜனநாயகம், மக்களின் சுதந்திரம் என்பது போன்ற கொள்கைகள் பரவலாயின.

* * *

இக்காரணங்களினால், இருகண்டங்களின் சக்திகளிலும் பெரும் ஏற்றத்தாழ்வு உண்டாயிற்று. அவற்றின் சம்பந்தத்தில் அடிப்படையா யிருந்த சமத்துவ நிலை திடீரென்று தலைகீழாய் மாறிற்று. ஐரோப்பாவில், புதிய அறிவு நூல் - விஞ்ஞான சாஸ்திரம் - வெற்றிமேல் வெற்றி யடைந்து உலகாயதக் கொள்கைக்குப் பலங் கொடுத்தது. வாழ்க்கையில் வியாபாரமே தலை சிறந்த இலட்சியமாயிற்று. ஐரோப்பாவில் மத்திய காலத்தில் சந்நியாசியே மக்களில் சிரேஷ்டனாகக் கருதப்பட்டான். பின்னர், வீரன் அவனுடைய பதவிக்கு வந்தான். இயந்திர நாகரிகம் தோன்றிய பிறகு, கடைக்காரனே சிரேஷ்ட புருஷனானான். இம்மாறுதல்களின் படி ஏற்பட்ட பொருளாதார வளர்ச்சியானது கடல் கடந்து சென்று நாடு பிடிப்பதை ஐரோப்பியர்களுக்கு இன்றியமையாததாக்கிற்று. ஐரோப்பா இந்நிலையை யடைந்த போது முதன் முதலாக ஆசிய நாகரிகமும், ஐரோப்பிய நாகரிகமும் சந்திக்க நேர்ந்தது பெரிதும் துரதிர்ஷ்ட வசமே யாகும். இதன் பயனாக, அந்நாகரிகங்கள் ஒன்றோடொன்று மோதிக் கொண்டு தங்கள் அடிப்படையான வேற்றுமைகளை வெளிப்படையாகக் காட்டின.

* * *

பொது நோக்காகப் பார்த்தால் ஐரோப்பிய நாகரிகம் விரிந்து பரவுவதென்றும், ஆசிய நாகரிகம் ஆழ்ந்து செல்வதென்றும் சொல்லலாம். முன்னது அளவை முக்கியமாகக் கவனிப்பது; பின்னது குணத்தைப் பிரதானமாகக் கருவது. ஐரோப்பிய நாகரிகம் ஜனத்திரளுக்குரியது;எனவே பாமர ஜனங்களுக்கும் பயன்படும் வண்ணம் சில உயர் அம்சங்களை அது கைவிடத் தயங்காது. ஆசிய நாகரிகமோ ஜனத்திரளைப்பற்றிக் கவலை கொள்வதேயில்லை; அது வாழ்க்கையைத் தன் இயற்கை வழிச்செல்ல விட்டு விடுகிறது. இயற்கை வளர்ச்சிக்கு விடப்படும்பிரதேசங்களில் காடுகள் மண்டுவதுஇயல்பேயன்றோ? ஆசியாவில் ஒரு மனிதனின்மரணம், ஒரு மரத்தின் சாவைவிட முக்கியமாகக் கருதப்படுவதில்லை. தனிப்பட்ட ஒருவன் எக்கேடு கெட்டாலுங் கெடட்டும்;சாதி, சமூகம், பரம்பரைத் தர்மம் இவையே முக்கியமானவை. ஐரோப்பியர்களுக்குப் பய

Roja Muthiah Research Library
3rd Cross Road, C P T Campus
Taramani, Chennai 600 113.

Best copy available

கரமளிக்கும் உடன்கட்டை யேறுதல் போன்ற வழக்கங்களுக்கு இத்தகைய மனோபாவமே காரணமாகும். சீனத்தின் உள்நாட்டுச் சண்டைகளில் லட்சக்கணக்கான ஜனங்களின் மரணத்தைப் பற்றிச் சீன சரித்திராசிரியர்கள் எவ்வளவு அலட்சியமாகக் குறிப்பிட்டுச் செல்கிறார்கள் என்பது நமக்கு உண்மையிலேயே பேராச்சரியம் விளைவிக்கும்.

* * *

மேலே கூறியது ஆசிய நாகரிகத்தின் இருளடர்ந்த அம்சம். ஒளிபொருந்திய அம்சம் அதன் பாரமார்த்திக மேன்மையாகும். முன் சொன்ன இருளே பின்கூறிய ஒளிக்குக் காரணமென்றால், விநோதமாகத் தோன்றலாம். ஆயினும் உண்மை அதுவே. சீனத்தின் மகோந்நத காலத்திலும் அங்கு 100-க்கு 77 பேர் எழுதப் படிக்கத் தெரியாதவர்களே. சீனத்திலிருந்து மற்றொருகோடியிலுள்ள ஸமார்க்கண்டு நகருக்குத் தாவிச் சென்று பார்ப்போமானால் அங்கும் தற்போது 100-க்கு 3 பேர் வீதமே படிக்கத் தெரிந்த மக்கள் இருக்கிறார்கள். உண்மை யென்னவென்றால், ஆசிய நாகரிகம் ஜனத்திரளைப் பொருட்படுத்துவதில்லை. சமூகத்தில் மிகச் சிறு பகுதியான ஒரு குழுவினர்க்கே அது பெரிதும் உரியது. சமூகத்தில் தனியே பிரிந்து நின்ற இச்சிறு குழுவினர் பாரமார்த்திகத் துறையில் மிக உந்நத நிலையை யடைந்தார்கள். ஜனத்திரளாகிய பெருங் கனம் அவர்களைக் கீழே பிடித்து இழுக்கவில்லை. அவர்கள் அறிவு வளர்ச்சிக்கென்றே அறிவாராய்ச்சியில் ஈடுபட்டு மேலே மேலே பறந்து சென்றார்கள். அவசர புத்தியுள்ள மேற்புல் மேயும் ஐரோப்பியர்கள் நாலு நூற்றாண்டு காலம் கலந்து பழகியபின்னரே, பாரமார்த்திகத்துறையில் ஆசியநாகரிகம் வெளியிட்டுள்ள உண்மைகளை அறியத் தொடங்கி யிருக்கிறார்களெனில், அவ்வுண்மைகள் எவ்வளவு மகத்தானவை, எவ்வளவுபொருள் பொதிந்தவை என்று ஒருவாறு ஊகித்துணரலாம். ஆசியாவின் இயற்கை அமைப்பும், அதன் விஸ்தாரமும், பண்டைக் காலத்து முனிபுங்கவர்கள் ஏகாந்த மடைந்து, மௌன வெள்ளத்தில் மூழ்கி, கால தேச வர்த்தமானங்களைக் கடந்த மகத்தான உண்மைகளைக் கண்டுபிடித்து வெளியிடத் துணை செய்தன. ரிக்வேதமும், உபநிஷதங்களும், புத்தரின் போதனைகளும், சீன மகான் லெயோ த்ஸூவின் உபதேசங்களும், ஹிந்து சமயத்தின் பக்தி சூத்திரங்களும், கன்பியூஷியஸ்ஸின் சன்மார்க்க தத்துவங்களும் மக்கட்குலத்தின் பாரமார்த்திகப் பெருஞ் செல்வங்களுள் தலை சிறந்தவையாகும்.

(தொடரும்)

---

### வாழ்த்து

அன்புரு வான சீயும்
அவனியில் சோத ரத்வம்
இன்புடன் பெருகு மாறு
இந்தியா வுக்கு நல்ல
தென்புசேர் 'நேரு'ச் சங்கம்
தேர்ந்ததீர்மான மூடே
வன்புவிச் சுய ஆதிக்கம்
வந்திடச் செய்வா யின்றே.

கே. எஸ். இராமசாமி ஐயர்.

---

கலிலியோ என்பார் மூன்று நூற்றாண்டுகளுக்கு முன்பு முதன் முதலாகத் தூரதரிசினிக் கண்ணாடி ஒன்று செய்தார். அதற்கு முன்பு வானத்தில் சாதாரண கண்களால் பார்த்து 10,000 நட்சத்திரங்கள் இருப்பதாகக் கணக்கிடப் பட்டிருந்தது. கலிலியோவின் தூர தரிசினி இத்தொகையை உடனே பத்துமடங்காயிற்று. அதற்குப் பின்னால் பெரிய பெரிய தூர தரிசினிக் கண்ணாடிகள் செய்யப்பட்டு, அவற்றுள் எல்லாம் மிகப் பெரியதான மௌண்ட் வில்ஸன் நட்சத்திர மண்டபத்திலுள்ள நூறங்குலக் கண்ணாடியின் மூலம் ஒரு லட்சங்கோடி நட்சத்திரங்கள் கண்டுபிடிக்கப் பட்டிருக்கின்றன. தற்போது மேனாட்டு ஆசிரியர் ஒருவர் மேற்படி மௌண்ட் வில்ஸன் தூரதரிசினியை விட ஆறு மடங்கு பெரிய கண்ணாடியைச் செய்ய முயன்று வருகிறாராம்.

## லஜபதியின் பிரிவாற்றாமை

நந்தாத தவவாய்மை அன்பர்செறி பாரதமெனும் நற்கண் டத்தே
ஐந்தாறு பாய்ந்திடுமோர் பாஞ்சாலத் தணிவிளக்கே அறஞ்செ ழிக்க
வந்தானே ! சாகரனும் நகரதனில் வைசியமா மரபு தித்த
மைந்தாவோ ! மஞ்சாவோ ! மறைந்தனையோ மாதவமா மகிப ரேறே !

பாஞ்சாலச் சிங்கமெனப் பல்லாண்டின் முன்பேநற் பட்டம் பெற்றாய்
'தாஞ்சாக மருந்துண்ணும் அறிவிலிபோல்' அடிமையாந் தகைமைக்கேயிங்
காஞ்சால்பை அறிவுறுத்தும் புறக்கல்வி புறக்கணிப்ப தறிவே யென்றாய் !
திஞ்சாலி விளைபழனத் திருநாட்டின் திலகமே ! சென்ற தெங்கே ? (உ)

ஞாயோருட் டுயோனே ! 'இந்தியத்தாய்' எனுநூலில் சூழ்ச்சி மிக்க
மேயோவென் பாளொருத்தி வரைந்தவெலாம் மிகையாதல் விளக்கி விட்ட
நீயோவிங் கெமர்கதற உடல்நீத்தாய் ! புறநாட்டும் புகழ்நி றைந்தாய்!
தாயோவிங் கலக்கணுறத் தலைவர்களோ கலக்கமுறச் சார்ந்த தெங்கே ?

நல்லார்தம் நாயகமே அகத்தொன்றும் புறத்தொன்றும் நாடும் புன்மை
இல்லானே ! இதயத்திற் கரவில்லா தெதனையுமே இயம்புந் தன்மை
வல்லானே ! அன்னைதளை தெறித்திடவே வகுத்ததொரு வழியைப் பற்றி
இல்லாட்சி குறிக்கொண்டு பயன்கருதாப் பணிசெய்தாய் எங்குற்றாயே? (ச)

மாலார்ந்த மனத்தினராய் வாய்ப்பேச்சில் வல்லவராய் மலிந்தா ரிங்கே
ஏலாத திட்டங்க ளவைகருதி வெறுமொழிகள் இயம்பு கின்றார்
சீலாவோ ! அவர்திருந்த செம்மொழிகள் புகல்கின்ற சீய மே!எம்
லாலாவோ ! லாலாவோ ! இவ்வமயம் லஜபதியே ! எங்குற் றாயே ? (ரு)

வேறு

பிறந்தநாடொடங்கியுன்றன் பெருமைமிக்கவாழ்விலே
மறந்துமேனுமாணவத்தின் மையலுற்றுளாய்கொலோ ?
துறந்துளாருமேத்துசீரின் தூயசேவைசெய்தநீ
இறந்துபட்டதிந்தியரிழைத்ததீவினைகொலோ ! (சு)

வேறு

திருவளர் செல்வ ! லாலா லஜபதி சீய மே!நின்
திருவுரு மறைந்த தாலே திகைக்கின்றோம் வினையோ மிந்த
பெருதுயர் மாற்று மாறு தெளிகிலோ மெனினு முன்சொற்
பெருக்கும் நின் னுரைக டாமும் பேதையேம் உய்யு மாற்றைத்
தருவன வாக ; அன்னை தளைதனைத் தறிக்க வீசன்
தருக்கற்றுப் பணிசெய் வீரத் தன்மையே தருக ; நின்றன்
பருவுடல் மறைந்த தேனும் நுண்ணுடல் மறையா திந்த
பரதமா கண்டத் தென்றும்நிலவுக நீடு மாதோ ! (எ)

ஆரியூர் - வ - பதுமநாப பிள்ளை.

---

புலமைநிறை லசபதியே புத்தேளிர் விருந்தேற்க
நிலவுலகை நீத்தனையே ! நின்னையாம் பிரிந்தனமே !
அலகில்புகழ் பெருந்தேவே ! ஐயோவோ ! ஐயோவோ !
கலைநிலவு திருமணியே கண்முன்னே வாராயோ ! (க)

ஐயோநற் பரதஅனை அன்பமரும் திருமகனே !
செய்யோனே ! நல்லவர்க்குத் தீயவற்கு வெய்யோனே !
பொய்யாய பருவுடலை மெய்யென்பார் மொழிப்புன்மை
மெய்யாக நிலைபெறுத்த விட்டனையோ இவ்வுடலை. (உ)

பாஞ்சாலப் போரேறே பாண்டவரின் உறவினனே !
மாஞ்சாயோ ! வீரமிலெம் மொடுவாழ்வை வெறுத்தாயோ !
தீஞ்சாலி விளைபழனத் திருநாட்டாய் பற்றிலரும்
நீஞ்சார்யாம் நீஞ்சுவமோ ? நின்துயரப் பெருவெள்ளம். (௩)

ஐயையோ ! அன்னையே ! அருட்பரத மங்கையே !
ஐயையோ ! காந்தியே ! அழகுமிகு பாஞ்சலமே !
ஐயையோ ! இமயமே ! அருந்தமிழார் பொதியமே
ஐயன்ஆ ! லசபதியை அந்தோ !நீர் பிரிந்தீரே. (ச)

இந்தியநா டெனுமுடம்புக் கெழிலுறுகண் ணப்பாவோ !
நந்தியம்பு நீர்த்துறைசூழ் நறுமணத்த பாஞ்சாலா !
செந்திறமை இல்லாதான் செய்ததொழில் நினைந்தேயோ !
உந்துயர் எமக்களித்தாய் உயர்வெற்றிக் கலம்பூண்டாய். (ரு)

மயிர்நீப்பின் மானத்தால் உயிர்நீக்கும் மாவினைப்போல்
உயிர்நீப்பர் மானம்வரின் உயர்புகழே விழைவர் ; எனச்
செயிர்நீத்த வள்ளுவனார் செப்புகுறட் கருத்துணர்ந்தோ ?
அயிர்பூத்த கடலுலகம் அண்ணுவோ ! துறந்தாயோ ! (சு)

அறத்தின்வழி அல்லாமல் அரும்பகையை நாம்கடத்தல்
மறத்தின்வழி அரிதாகும் என்பதனை வலியுறுத்து
நிறத்துநீ ஏற்றஅடி நிலஉலகம் பட்டதெனப்
புறத்தொன்றும் அகத்தொன்றும் புகலாதோன் மொழிந்தானே. (எ)

பூதவுடல் நீத்தஉயிர் புகழுடலில் நுண்ணுடலில்
காதலுடன் உலவும்அறி காட்சிமிகப் பெற்றென்றே
ஓதுகலை நனியுணர்ந்தோர் ஓதலின்யாம் உரிமைபெறப்
போதுகபின் புக்கிருக்க புண்ணியனார் திருவடிக்கே. (அ)

வீ. உலகவூழியன்.

## தென் திருவி தாங்கூர் திருநெறித் தொண்டர் குழாம் முதல் வருட நிறைவு விழா

இக்குழாத்தின் முதல் வருட நிறைவு விழா சென்ற ஐப்பசித் திங்கள் 19-ம் நாள் சென்னை அட்வகேட், தாகூர் சட்டவிரிவுரையாளர் திருமிகு. கா. சுப்பிரமணியபிள்ளை அவர்கள் எம். ஏ., எம். எல்., தலைமையில் நடைபெற்றது.

அறிக்கையும், உயர்திரு டி. பொன்னம்பலம் பிள்ளை அவர்களுக்குப் பாராட்டுத் திருமுகமும் படிக்கப்பட்டத்தார்கள். பின் இளந்தொண்டர்கள் பலர்சமய சம்பந்தமான உரையாடல் நிகழ்த்தினர். 'தமிழர் சமயம்' என்பதுபற்றி அவைத்தலைவர் அவர்களும், 'கம்பரும் திருவள்ளுவரும்' என்பது பற்றித் திரு. சபாபதிப் பிள்ளை பி. ஏ. யும் சொற்பொழிவுகள் நிகழ்த்தினார்கள். அப்பால் குழாத்தினர் வடிவீசுவரம் சிவாலயத்தில் சென்று வழிபட்டுத் தேவார திருவாசக முழக்கத்தோடு பந்தலை எய்தினர். அதன் பின் திருவனந்தபுரம் டி. லக்ஷ்மணன் பிள்ளை அவர்களின் இன்னிசை வீணை மீட்டலும், முத்தம்மாள் என்னும் சிறுமியால் இசைக்கீதங்கள் பாடலும் நிகழ்ந்தன. சாமி விருதை சிவ ஞான யோகிகள் சைவ சமயம் என்பது பற்றி நீண்ட சொற்பொழிவு நிகழ்த்தியதும், 'தொண்டர் குழாம்' என்பதுபற்றி அமைச்சர் கெ. ஆறுமுகம் பிள்ளை அவர்களும், 'தமிழர் வான நூல்' என்பது பற்றித்திருவாவடுதுறை ஆதீனம் சோதிடவித்தவான் இ. மு. சுப்பிரமணியபிள்ளை அவர்களும் 'உயிர்ப்பலி' என்னும் விஷயமாக நெல்லை சுந்தரமூர்த்தி ஓதுவாரவர்களும் விரிவுரை நிகழ்த்தினார்கள்.

தென் திருவிதாங்கூரைச் சேர்ந்த நாஞ்சில் நாட்டிலிருந்து திருவாவடுதுறை, தருமபுரம், திருப்பனந்தாள், உமாமகேசம் முதலிய மடங்களுக்கு இந்நாட்டின் சமய வளர்ச்சி கருதி இந்நாட்டு முன்னோர்களால் விடப்பட்டிருக்கும் தரும சொத்துக்களின் வருமானத்தை சொத்து விட்டோர் நோக்கப்படி ஷ மடாதிபதிகள் நடத்தாதிருப்பதால் அவற்றைச் சரிவர நடத்த வேண்டுமென்றும், மீதிவரும் பணத்தைச் சமய வளர்ச்சிக்காகத் தென் திருவிதாங்கூர் திருநெறித்தொண்டர் குழாம் வாயிலாய்ச் செலவிட வேண்டுமென்றும் கொண்டு வந்த தீர்மானம் யாவராலும் ஒருமனப்பட்டு நிறைவேற்றப்பட்டது. இன்னும் பல தீர்மானங்களும் நிறைவேறின. தலைவர் முடிவுரைக்குப் பின்னர் திருநெல்வேலி சுந்தர ஓதுவா மூர்த்திகளது தேவார முழக்கத்தோடு அவை இனிது நிறைவேறிற்று என்று அமைச்சர் எழுதுகிறார்.

---

## ஷேக்ஸ்பியருடன் சம்பாஷணை

ஷேக்ஸ்பியர் என்னும் பெயர்பெற்ற ஆங்கில நாடகாசிரியரைப்பற்றி அனைவரும் அறிந்திருப்பார்கள். இவர் பதினாறும் நூற்றாண்டில் வசித்தவர். தற்போது இங்கிலாந்தில் பிரசித்தநடிகரும் நாடகசாலைச்சொந்தக்காரருமான சர் பிராங்க் பென்ஸன் என்பார் மேற்படி ஷேக்ஸ்பியரின் ஆவியுடன் சில நாளைக்கு முன்பு சம்பாஷணை நடத்தியதாக "மார்னிங் போஸ்ட்" பத்திரிகையில் வெளியிட்டிருக்கிறார். அவர் சொல்வதாவது:— "ஆவேச பீடத்தின் மூலம் என்னுடன் பேசியவர் ஷேக்ஸ்பியர்தான் என்பதில் எனக்கு எள்ளளவும் சந்தேகமில்லை. 'என்னுடைய நாடகங்களை நீர் நடிக்கிறீர் என்று எனக்குத் தெரியும். அதுபற்றி மிக்க சந்தோஷம். உமது முயற்சியில் தளர்வுற வேண்டாம்' என்று அவருடைய குரல் எனக்குக் கேட்டது. ஷேக்ஸ்பியருக்குப் பின்னர், அஷ்கிலஸ் (புராதன கிரேக்க நாடகாசிரியர்) என்பவரின் ஆவி பேசிற்று. 'எனக்குப் பின்னால் என் பீடத்துக்கு வந்த மகானின் நாடகங்களில் நீர் வெற்றி பெற நானே காரணமா யிருந்தேன்' என்று அவர் கூறினார். இது உண்மையே. நான் முதல் முதலில் அஷ்கிலஸ் எழுதிய கிரேக்க நாடகம் ஒன்றில்தான் வெற்றி யடைந்தேன். இவ்விருவர் பேசியதிலும் எவ்வித ஏமாற்றமும் கிடையாதென்பதில் எனக்கு எட்டுணையும் ஐயமில்லை. மேலும் மறு உலகிலுள்ள எனது நண்பர் ஒருவர் ஆவேச பீடத்துக்குத் தெரிந்திருக்க முடியாத என்னுடைய அந்தரங்க விஷயங்களைப் பற்றிப் பேசினார். யுத்தத்தில் மாண்ட என் மகனுடனும் நான் பேசினேன். அவன் 'மரணமென்பதாக ஒன்றில்லை' யென்று என்னை ஞாபகத்தில் வைக்கும்படி கூறினான்."



## கலம்பகம்

இம்மாதம் 10ந் தேதியன்று ஜப்பான் அரசரின்பட்டாபிஷேகம் வெகுவைபவத்துடன் நடைபெற்றது.

o o o

இந்திய சட்டசபைத் தலைவரான கனம் வி. ஜே. படேல் இம்மாதம் 24-ந்தேதி சென்னைக்கு விஜயஞ் செய்வார்.

o o o

குழித்தலையில் ஒரு வானரம் ஓர் அணிப்பிள்ளையைத் தன் சொந்தக் குட்டியைப் போல் அருமையாக வளர்த்து வருகிறதாம்.

o o o

ஸிஸிலித் தீவிலுள்ள எட்னா எரிமலை விபத்தால் மொத்தம் 16 கோடி 'லிர்' நாணயம் பெறுமான சொத்துக்குச் சேதம் ஏற்பட்டிருக்கிறதாம்.

o o o

இந்திய தேசிய காங்கரஸ் மகா சபையின் தலைவரான டாக்டர் அன்சாரி சென்ற ஞாயிற்றுக் கிழமை காலை பம்பாய் மெயிலில் சென்னை வந்து சேர்ந்தார்.

o o o

சென்ற வியாழனன்று நடைபெற்ற ஆந்திரப்பல்கலைக்கழகப் பட்டமளிப்பு விழாவில் கவர்னர் கோஷன் பிரபுக்கும், ஆசிரியர் இராதாகிருஷ்ணனுக்கும் டாக்டர் (டி. எல்.) பட்டம் வழங்கப்பட்டது.

o o o

மைசூரில் அப்துல் ஹமீத்கான் என்னும் இளைஞர் ஓர் ஆங்கிலோ இந்தியப் பெண்ணைக் காதலித்து வந்தாராம். அவர் தகப்பனார் அதைத் தடுக்கவே, இளைஞர் ரயில்பாதையில் விழுந்து உயிர் துறந்தாராம்.

o o o

தீபாவளி சமயத்தில் கல்கத்தாவின் வெவ்வேறு இடங்களில் 14 தீவிபத்துகள் நேரிட்டன. இதனால் பெரும் நஷ்டம் விளைந்தது. ஓர் இடத்தில் தீயணைக்கும் இயந்திரம் ஒன்று பூமியில் அழுந்தி விட்டது.

o o o

சென்ற வெள்ளிக்கிழமை இரவு சென்னை ஹைகோர்ட் நீதிபதி வாலஸ் மாளிகையில் கள்ளர்கள் நுழைந்து 1200 ரூபா பெறுமான நகைகளைக் கொள்ளை யிட்டார்கள். துப்பு விசாரிக்கப்படுகிறது.

o o o

சென்ற சிலநாட்களாகப் பெய்த விடா மழையினால் கும்பகோணம் ஸ்ரீ கும்பேஸ்வர சுவாமியின் கீழ் கோபுரத்துடன் சேர்த்துக் கட்டப்பட்டிருந்த மண்டபத்தின் ஒரு பாகம் இடிந்து வீழ்ந்து விட்டது. உயிர்ச் சேதம் ஒன்றுமில்லை.

o o o

பண்டித நேரு என்ன கொள்கை யுடையவரா யிருப்பினும் காங்கரஸின் தீர்மானத்தை நிறைவேற்றி வைப்பாரென்று தங்களுக்குப் பூரண நம்பிக்கை யிருப்பதாகத் தமிழ் நாட்டுக் காங்கரஸ் கமிட்டி ஒரு தீர்மானம் நிறைவேற்றி யிருக்கிறது.

o o o

தென்னாப்பிரிக்காவில் இந்திய அரசாங்கத்தின் ஏஜண்டு பதவியிலிருந்து மகாகனம் சீனிவாசசாஸ்திரியார் சமீபத்தில் விலகிக் கொள்வார். அவருடைய ஸ்தானத்தில் ஸர். சே. வி. ரெட்டி நியமிக்கப்பட் டிருப்பதாய்ச் செய்தி கிடைத்திருக்கிறது.

o o o

சமீபத்தில் புதுக்கோட்டை இராஜா பதவிக்கு வந்த ஸ்ரீ ராஜகோபாலத் தொண்டைமானுக்குச் சென்ற திங்களன்று பட்டாபிஷேகம் நடைபெற்றது. இராஜா மைனராயிருக்கிறபடியால், சென்னை அரசாங்கத்தார் விஜய ரகுநாததுரை ராஜாவை ரீஜெண்டாக [illegible]ல பார்த்துவர நியமித்திருக்கிறார்.

o o o

சூரியன் தரும் உஷ்ணத்தில் 200 கோடியில் ஒரு பங்குதான் பூமிக்கு வந்து சேர்கிறது. இரண்டு மைல் குறுக்களவுள்ள ஒரு பிரமாண்டமான பனிக் கட்டித் தூண் பூமியிலிருந்து சூரியன் வரை நின்றால், அதை ஒரே ஒரு விநாடியில் கரைத்துவிடச் சூரியனிலிருந்து வீசிறும் மொத்த உஷ்ணம் போதுமானது.

o o o

மருவிப் பட்டணத்தில் சில சாமர்த்தியக் கொள்ளைக்காரர் பாம்புகளைக் கொண்டுவந்து வீடுகளில் எறிந்து விடுவார்களாம். பணமோ அல்லது ஏதாவது பொருளோ கொடுத்தால் தான் பாம்புகளை எடுத்துச் செல்வார்களாம். இவ்வாறு பயமுறுத்திப் பணம்பறித்த மூன்று பாதகர்களைப் போலீசார் சமீபத்தில் கைது செய்திருக்கிறார்கள்.

o o o

சென்னை நகர சபைத் தலைமைப் பதவிக்குச் சென்றவாரம் நடந்த தேர்தலில் "ஜஸ்டிஸ்" ஆசிரியர் ஸ்ரீமான் ஏ. இராமசாமி முதலியாரும், டாக்டர் சி. நடேச முதலியாரும் போட்டி யிட்டனர். முன்னவருக்கு 24 வாக்குகளும், பின்னவருக்கு 21 வாக்குகளும் கிடைத்தபடியால் ஸ்ரீமான் ஏ. இராமசாமி முதலியார் தலைவராகத் தெரிந்தெடுக்கப்பட்டார்.

o o o

[illegible]ர்ண குளத்தில் மகாராஜா கல்லூரி சரித்[illegible]ப் போதா காசிரியர் திரு. கே. ஆர். ராம ஐயரின் மனைவியாகிய 24 வயதுள்ள பார்வதி யம்மாள் தீபாவளியன்று சமயலறையில் ஏதோ பலகாரம் செய்து கொண்டிருந்தாள். அப்போது எண்ணெயில் தீப்பற்றிக் கொண்டது மன்றி அவள் புடவையிலும் தீப் பிடித்து எரிந்து வைத்தியசாலையில் மரணமடைந்தாள்.

o o o

வெளிச்சத்தைக் காட்டிலும் சத்தம் மிகவும் மெதுவாகப் பிரயாணம் செய்கிறது. சூரியனிலிருந்து கிளம்பும் வெளிச்சம் எட்டு விநாடியில் பூமிக்கு வந்து சேரும். ஆனால் சூரியனில் ஒரு பெரிய வெடி விபத்து ஏற்பட்டு அதன் சத்தம் பூமி வரை வந்து கேட்கக் கூடுமானால், விபத்து நேர்ந்து 14 வருஷங்கழித்தே நாம் சத்தத்தைக் கேட்போம்.

o o o

சென்னைத் திருவல்லிக்கேணி பார்த்தசாரதி கோயில் குளத்தில் 13—11—28-ல் ஸ்ரீமதி ருக்மணி அம்மாள் என்பார் குளித்துக் கொண்டிருக்கும் போது கால் வழுக்கித் தண்ணீரில் மூழ்கி இறந்து போனார். இவ்வம்மையார் சென்னைப் பல்கலைக் கழகப் புத்தகசாலையின் அதிபரான ஸ்ரீமான் எஸ். ஆர். அரங்கநாதனுடைய மனைவியாராவர்.

o o o

சூரியன் ஆகாய வெளியிலுள்ள கோடானுகோடி நட்சத்திரங்களில் ஒன்றுதான் என்று வானசாஸ்திரிகள் சொல்கிறார்கள். சூரியன் நமது பூமிக்கு மிகவும் அருகாமையிலுள்ள நட்சத்திரமாகும். பூமியிலிருந்து இதன் தூரம் 930 லட்சம் மைல்தான்! அதற்கடுத்தபடி நமக்கருகாமையிலுள்ள நட்சத்திரம் 25 லட்சங் கோடி மைலுக்கப்பால் உள்ளது.

o o o

லண்டனில் 'இந்திய ஸோஷியல் சங்கத்தின' ரால் தீபாவளிக் கொண்டாட்டம் நடை பெற்றது. பரத்வான் மகாராஜா, கூச்பீஹார் மஹாராணி, ஸர் மனுபாய் மேத்தா, அவர் மனைவி, ஸர் அபாஸ் அலிபேச், இந்திய சமஸ்தான குடிகளின் பிரதிநிதிகள் முதலிய பல இந்தியர்கள் கொண்டாட்டத்தில் கலந்து கொண்டார்கள். அப்போது ஸர். எம். புவனகிரி தலைமை வகித்தார்.

o o o

பஞ்சாப் சட்டசபையில், ஐரோப்பிய ஆங்கிலோ இந்திய சமூகத்தின் பிரதிநிதியாயிருந்த டாக்டர் சி. ஏ. ஓவன் ராஜிநாமா செய்ததன் காரணமாகக் காலியான பதவிக்கு டாக்டர் மிஸ் ஷேவ் என்னும் மாதைக்கவர்னர் நியமித்திருக்கிறார். பஞ்சாப் சட்டசபையில் முதல் ஸ்திரீ அங்கத்தினர் இவரேயாவர். இவ்வம்மையார் ஆங்கிலோ இந்திய சமூகத்தைச் சேர்ந்தவர்.

o o o

பெங்களூரில் ஓர் இடத்தில் ஒரு படாஸ் கடையில் பலர் தீபாவளிப் பண்டிகைக்காக வெங்காய வெடி வாங்கிக் கொண்டிருந்தார்கள். அந்த வெங்காய வெடிகளைப் பொட்டணம் கட்டும்போது அதில் ஒன்று வெடித்து பெரிய விபத்து ஏற்பட்டதால் இரு சிறுவர் அவ்விடத்திலேயே இறந்து போயினர். கடைக்காரனும் மற்றொரு சிறுவனும் பெருங்காயமடைந்து வைத்திய சாலையில் இருக்கின்றனர்.

o o o

லண்டன் ரயில்வே ஸ்டேஷன் ஒன்றினருகில் இருப்புப் பாதையில் ஒரு பைத்தியக்காரன் படுத்துக் கொண்டிருந்தான். அப்போது ஒரு ரயில் அவன் சமீபம் நெருங்கிவிட்டது. இதைக் கண்ணுற்ற லாகன்ராம் என்கிற ஓர் இந்தியர் விரைந்தோடி அவனை அப்புறப்படுத்தி ஆபத்தினின்றும் காப்பாற்றினார். மன்னர் பெருமான் 'எட்வர்ட் பதக்கம்' ஒன்று அவ்வீருக்களித்துள்ளார்.

o o o

அமெரிக்காவின் கடற்கரை யோரத்தில் "வெஸ்டிரிஸ்" என்னும் பிரிட்டிஷ் கப்பல் புயற்காற்றில் அகப்பட்டுக் கடலில் மூழ்கிற்று. கப்பலில் இருந்த மொத்தம் 349 ஜனங்களில் 114 பேர் மாண்டார்கள். மற்றவர்கள், உதவிக்கு வந்த கப்பல்களால் தப்புவிக்கப் பட்டார்கள். இவர்களில் ஜப்பானிய இளம்பெண் ஒருத்தி, மாண்டுபோன தன் கணவனை இறுகக் கட்டிக்கொண்டிருந்த நிலையில் தப்புவிக்கப்பட்டாளாம்.

o o o

திரிசிராப்பள்ளிச் சிறைச்சாலையில் ரயில்வேலை நிறுத்த சம்பந்தமாகத் தண்டனை யடைந்திருக்கும் ரயில்வே தொழிலாளர் ஒருவருக்குக் கொடுக்கப்பட்ட கீரைத் தண்டு சாம்பாரில் ஒரு புழு இருந்ததாகவும் அதைச் சாப்பிட மனமின்றி வேறு சாம்பார் கேட்டதற்கு அவரைச் சிறைக் காவலாளர் ஒருவர் தாக்கியதாகவும் சொல்லப் படுகின்றன. இது குறித்துச் சிறை அதிகாரிகளுக்கு அறிவிக்கப் பட்டபோது, அவர்கள் காவலரைக் கண்டித்ததோடு நின்று விட்டனராம்.

o o o

இலங்கையில் கூல்பான் சமஸ்தான சூப்பரிண்டெண்டாகிய திரு. எஸ். கே. டிக்ஸன் தன்னருமை வேட்டை நாயுடன் காட்டுக்கு வேட்டையாடச் சென்றார். அப்போது அந்நாய் ஒரு குரங்கைத் துரத்திச் சென்றது. அவ்வானரம் மலையினடிவாரத்திலுள்ள ஒரு மரத்தின் மேல் ஏறிக் கொண்டது. இதைக் கண்ட நாய் அம்மலையின் மேல் 50 அடி தூரம் ஏறிச் சென்று அதைத் துரத்திய போது தவறிக் கீழேவிழுந்து இறந்தது.

o o o

இந்தியா மந்திரியாக விருந்த லார்ட் பார்க்கன் ஹெட் தமக்கு நடத்தப்பட்ட விருந்தொன்றில் "சென்ற 13 ஆண்டுகளாக நான் மந்திரி சபையில் அங்கத்தினராக இருந்ததில் என் சொந்த சொத்து மிகவும் குறைந்து விட்டது. எனவே நான் அரசியலை விட வேண்டியிருந்தது. மீண்டும் அரசியலில் கலந்து கொள்வது அவசியம் என்று தோன்றுகிறவரை ஒதுங்கியே இருப்பேன். ஆனால் நான் அரசியலை அடியோடு விட்டொழிக்கவில்லை. இன்னும் நான் பல போராட்டங்கள் நிகழ்த்த வேண்டியிருக்கிறது" என்று கூறினாராம்.

o o o

திருவல்லிக்கேணியில் தன்மனைவி காமாட்சியைத் தீ வைத்துக் கொலை செய்ததற்காக இராமசாமி சாஸ்திரி மீதும், அதற்கு உடந்தையாயிருந்த அவர் தமையனார் பிரணதார்த்திஹரகனபாடிகள் மீதும் கொண்டுவரப்பட்ட வழக்கு சென்னை ஹைகோர்ட் செஷன்ஸில் நீதிபதி தேவதாஸ் முன்னிலையில் விசாரணைக்கு எடுத்துக் கொள்ளப்பட்டது. எதிரிகளுக்காக ஸ்ரீமான்கள் வி. எல். எத்திராஜ், வி. என். ரூப்பு ராவ் முதலிய வக்கீல்கள் ஆஜராகி யிருக்கிறார்கள். சாட்சி விசாரணையும் குறுக்கு விசாரணையும் நடந்து வருகின்றன.

o o o

சென்ற வாரத்தில் ஓர் ஆங்கிலேய வாலிபர் சென்னை மூர்மார்க்கட்டில் தம்மனைவியுடனும் குழந்தைகளுடனும் சாமான்கள் வாங்கிக் கொண்டிருந்தாராம். அப்போது மனைவி விரும்பிய ஒரு சாமானைக் கணவன் வாங்கிக் கொடாததால், இருவருக்கும் பெரிய வாய்ச் சண்டை உண்டாயிற்று. பின்னர் வாய்ச் சண்டை முற்றி, கணவன் தம்மனைவியின் கன்னத்தில் அறைந்தார். அதற்குப் பதில் அவளும் கணவன் கன்னத்தில் அறைந்தாள். கணவன் வெட்கத்தினால் கன்னத்தைத் துடைத்துக் கொண்ட பின்னர் இருவரும் வீடு சென்றார்கள்.

o o o

மொரோக் கோவில் காப்டன் காய்டார்டு என்னும் பிரஞ்சு உத்தியோகஸ்தர் தம் வேலைக்காரனுடன் ஒரு புதிய கட்டிடத்தில் வசித்துவந்தார். வேலைக்காரன் மொரோக்கோ முஸ்லிம். அவன் அக்கட்டிடம் ஒரு புண்ணிய ஸ்தல மென்றும், அதனால் அக்கட்டிடத்தின் சில பாகங்களை முத்தமிட வேண்டுமென்றும் அங்கே சுருட்டுக் குடிக்கக் கூடாதென்றும் எஜமானருக்குக் கூறுவது வழக்கமாம். அதற்கு அந்த பிரஞ்சுக்காரர் செவி சாய்க்காமல் அலட்சியம் செய்து வரவே, ஒரு நாள் இரவில் அவர் நித்திரை செய்து கொண்டிருக்கும் போது அப்பணியாளன் அவரைச் சுட்டுக் கொன்றான்.

o o o

சென்ற புதனன்று திருவிடை மருதூர் கோவிந்தபுரம் புதுத்தெருவில் வைத்தியர் திரு. குருமூர்த்தி செட்டியார் வீட்டின் கிழண்டை வீட்டுச் சுவர் மழையினால் இடிந்துவிழ, செட்டியார் சுவரும் இடிந்து விழுந்ததாம். வீட்டிற்குள் படுத்திருந்த செட்டியாரின் தங்கை, பெண், மருமகள் ஆகிய மூன்று ஸ்திரீகள் இடிந்து விழுந்த சுவரின் கீழ் அகப்பட்டுக் கொண்டனர். மருமகள் நசுங்குண்டு உயிர் துறந்தாள். மற்ற இரு ஸ்திரீகளும் கவலைக்கிடமான நிலையில் வைத்தியசாலையில் இருக்கிறார்கள். இடிந்து விழுந்த சுவரைச் சரிப்படுத்தும்போது அதனின்றும் வெளிவந்த ஒரு பாம்பு அங்கிருந்த 20 வயதுள்ள ஒரு பையனைக் கடித்து விட்டதாம்.

o o o

இம்மாதம் 8-தேதி யன்று மன்மாத் என்னும் ஊருக் கருகில் 'அலகாபாத் எக்ஸ்பிரஸ்' ரயில் வண்டியில் ஏற்பட்ட வெடி குண்டு விபத்து சம்பந்தமாக காசி பத்ரதேவ் பட்டாச்சாரி கைது செய்யப்பட்டார். அவர் விசாரணையில் தாமும், குண்டு வெடித்ததில் இறந்து போனவரும், மற்றொருவரும் சைமன் குழு பம்பாய்க்கு விஜயம் செய்யும் போது அவர்கள்மீது குண்டு போடச் சில குண்டுகள் கொண்டுவந்ததாகவும், அவை தற்செயலாய் ரயிலில் வெடித்துத்தமது கண்பர் மாண்டதாகவும் ஒப்புக்கொண்டதாகச் சொல்லப்படுகிறது. பின்னர் காசியில் இவர்களிருந்த அறையைச் சோதித்துப் பார்க்கையில் குண்டுகள் தயாரிக்கவேண்டியதற்கான சாமான்கள் கிடைத்தனவாம். மூன்றாவது எதிரியான வங்காள வாலிபனையும் கைது செய்திருப்பதாகத் தெரியவருகிறது.

o o o

கொழும்பு செயிண்ட் ஜோசப் கல்லூரியைச் சேர்ந்த பாதிரியார் லெகாக் என்பார் வானத்தில் ஒரு விந்தையைப் பார்த்ததாகக் கூறுகிறார். சென்ற மாதத்தில் சில மாணவர்கள் வானத்தில் ஏதோ ஒன்று தோன்றுகிறதென்று பாதிரியாரிடம் கூறினார்களாம். அப்போது பாதிரியார் வானத்தைப் பார்த்த போது சூரியனுக்கு வலது பக்கத்திலே ஒரு வெண் மேகத்தினிடையே தீப் பந்தம் போன்ற ஓர் அக்கினிச்சுவாலை தெரிந்ததாம். இத்தகைய அதிசயத்தை இப்பொழுதுதான் முதன் முதல் கண்டதாகவும், அவ்வெண்மையான மேகம் பல பனித்துளிகளால் ஆக்கப்பட்டதாயிருக்கலாமென்றும், அதன் மீது சூரிய கிரணங்கள் படுவதினாலேயே இத்தகைய செம்மை நிறம் உண்டாயிருக்க வேண்டுமென்றும் அவர் கூறுகிறார்.

o o o

சைமன் கமிஷன் :—சைமன் கமிஷனார் பஞ்சாப்பிலிருந்து கராச்சிக்குச் சென்றார்கள். இங்கு பகிஷ்கார முழக்கம் பலமாயிருந்ததாகத் தெரிகிறது. கறுப்புக்கொடி ஊர்வலங்கள் முதலியவை நிகழ்ந்தன. கமிஷன் அங்கத்தினர்கள் ரயில் ஸ்டேஷனிலிருந்து இறங்கிச் சென்றபோது கிளம்பிய "சைமனே! திரும்பிப் போ" என்னும் சத்தமும் பின்னால் இந்தியக் கமிட்டி அங்கத்தினர் வந்தபோது கிளம்பிய "வெட்கம் வெட்கம்" என்னும் சத்தமும் ஒரு மைல் தூரம் கேட்டனவாம். ஊர்வலத்தில் சுமார் 20,000 ஜனங்கள் கலந்து கொண்டனர். கமிஷன்முன்பு சாட்சியங்கொடுப்பதாக அறிவித்திருந்த பிரபல ஹிந்து தலைவரான மாஜி பிரின்ஸ்பால் ஸாஹானி லாலாஜி அடிக்கப்பட்டதன் காரணமாகச் சாட்சியங் கொடுக்க மறுத்து விட்டார். ஆனால் மற்றும்பலர் சாட்சியங் கொடுத்தனர். விருந்துகளுக்கும் குறைவில்லை. பின்னர், சைமன் கமிஷனார் பலுசிஸ்தானத்திற்குச் சென்று அங்கிருந்து இப்போது பெஷாவருக்குப் போயிருக்கின்றனர். இவ்விடத்திலும் பகிஷ்கார ஆர்ப்பாட்டங்கள் நடைபெறுவதாகச் செய்தி கிடைத்திருக்கிறது.

o o o

சைமன் கமிஷனும் "பிரீபிரஸ்" ஸூம் :— "பிரீபிரஸ்" (Free Press) என்னும் செய்தியனுப்பும் ஸ்தாபனம் தேசீயச் சார்புடைய தென்று கருதப்படுவது. அரசாங்க ஆதரவு பெற்ற "அஸோஸியேடட்பிரஸ்" என்னும் ஸ்தாபனத்துக்குப் போட்டியாக வேலை செய்வது. இச்சங்கத்தார், சைமன் கமிஷனுக்கு அந்தரங்கமாய்ச் சமர்ப்பிக்கப்பட்ட பம்பாய், பஞ்சாப் அரசாங்க அறிக்கைகளின் விஷயம் என்னவென்று தங்கள் முயற்சியினால் அறிந்து பகிரங்கம் செய்துவிட்டனர். இது குறித்து ஸர் ஜான் சைமன், கமிஷன் விசாரணையைக் கவனிப்பதற்கு அச்சங்கத்தினர்க்கு அளிக்கப்பட்டிருந்த அநுமதிச் சீட்டை ரத்து செய்து விட்டார். "டைம்ஸ் ஆப் இந்தியா" "பயனியர்" பத்திரிகைகள் உள்பட இந்தியப் பத்திரிகைகள் பெரும்பாலும் அச்செய்கையைக் கண்டித்தன. இதற்கிடையில் "பிரீபிரஸ்" மானேஜிங் டைரக்டர் ஸ்ரீமான் ஸதானந்து ஸர் ஜான் சைமனைப் பேட்டி கண்டு பேசினார். தங்கள் முயற்சியினால் சேகரிக்கும் எவ்வித அந்தரங்கச் செய்திகளையும் வெளிப்படுத்தத் தங்களுக்கு உரிமையுண்டென்று அவர் கூறி, ஆயினும் கமிஷன் தலைவர் கேட்டுக் கொள்ளும்பட்சத்தில் இனி அவர் அந்தரங்க மென்று கருதுபவற்றை வெளியிடாதிருப்பதாக அவர் ஒப்புக் கொண்டார். இதன் மேல் ஸர் ஜான் சைமன் "பிரீபிரஸ்" ஸுக்குப் பிரதிநிதிச்சீட்டு வழங்க ஒருப்பட்டார். ஆனால் இது சம்பந்தமாகக் கமிஷன் காரியதரிசி வெளியிட்டுள்ள அறிக்கையில் "பிரீபிரஸ்" கார் 'கிபந்தனைக் கிணங்கினர்' என்று குறிப்பிட்டிருப்பதால் மீண்டும் தொல்லை ஏற்பட்டது. கடைசியில், 'பிரீபிரஸ்' கார் கமிஷன் விசாரணையைப் பகிஷ்கரிக்கத் தீர்மானித்து விட்டனர்.

---

உலகில் மிகப்பெரிய வெண்கலச்சிலை ரேரின் நகருக்கருகில் இருக்கிறது. இது பெரியதொரு வெற்றியின் நினைவுக் குறியாகச் சிறகுகளுடன் அமைக்கப்பட்ட சிலையாகும். இதன் உயரம் 60 அடி.

* * *

தென்னாப்பிரிக்காவின் நதிகளில் ஜலம் வற்றிப் போகும் போது, ஒரு வகை விநோத மீன்கள் மண்ணில் கூடு கட்டிக் கொண்டு, திரும்ப ஜலம் வரும் வரையில் அக்கூட்டிலேயே வாழ்ந்து வருகின்றனவாம்.

* * *

தற்போதுகண்டுபிடிக்கப் பட்டிருக்கும்நட்சத்திரங்களுக்குள் மிகவும் தொலைவிலுள்ள வற்றிலிருந்து நமக்கு வெளிச்சம் வந்து சேர 14 கோடி வருஷம் பிடிக்குமாம். வெளிச்சம் விநாடிக்கு 186,000 மைல் வீதம் பிரயாணம் செய்கிறது. சூரியன் நமது பூமியை விடப் பத்து லட்சம் மடங்கு பெரியது. ஆனால் இப்போது கண்டுபிடிக்கப் பட்டுள்ள மிகப் பெரிய நட்சத்திரம் நமது சூரியனை விட 250 லட்சம் மடங்கு பெரியதாம்.

# வாழ்வில் ஓர் அரிய வினா

நீதிபதி திவான்பகதூர் எம். கே. சுந்தரம் செட்டியார் "பாரத தர்மா" என்னும் பத்திரிகையில் எழுதிய பின்வரும் கட்டுரையை ஸ்ரீமான் பி. கந்தநரசிம்மன் பி. ஏ., பி. எல். மொழி பெயர்த்து நமக்கு அனுப்பியுள்ளார்:—

வாழ்வில் குறித்த நிலையொன்றை எய்தியதும் மக்கள் தாம் இருதலைக் கொள்ளிகளாக இருப்பதை உணர்கிறார்கள். வளர் நெறியான பிறப்பிறப்புத் துறையில் தாம் தற்போது எய்திய நிலை அதிருப்தி தருவதைக் காண்கின்றனர். அந்நிலையோடு நில்லாது, மேலும் சிறந்த—உயர்ந்த—நிலையை அடைய அவாவுகின்றனர். ஆனால், வெகுநாள் பழக்கத்தால் மக்கள் தமதெனப் பற்றிக்கொண்டவைகளை விட்டுத் துறக்க மாட்டாதவராகின்றனர். அவர்கள் அவ்வாறு துறப்பதற்கு அச்சமுறுகிறார்கள். அப்பற்றுக்களை—ஆசைகளை—விடார் என்றாலும் முன்னிலும் உயர்ந்த நிலையைப் பெறும் வேட்கை அவர்மாட்டு மிளிர்கிறது. ஆனால், "கடவுள் நிலையையும் - செல்வ நிலையையும் ஒருங்கே யடைதல் முடியாது" என்னும் உலக வழக்கை அவர் தெளியத் தெரிந்து கொள்ள வில்லை. அநேக ஜன்மங்களின் பலனாக ஏற்பட்ட மனப் போக்குகளைத் திருப்புவதும், பிறப்பிறப்புத் துறையில் விருத்தியாகிய பற்றுக்களை விடுவதும் எளிதானவை யல்ல. எனினும், நிலைபெற்ற ஆத்ம விருத்தி ஏதேனும் பெற வேண்டுமானால், அவர்கள் கஷ்டங்கள் அனைத்தையுங் கடந்தே தான் தீர வேண்டும்.

அன்னவர் மாட்டொரு விநோத முண்டு: அதாவது, உலக விஷயங்களில் ஒரு லாபத்தையோ - நன்மையையோ - அடைவதற்கு வேண்டிய துறவை அல்லது தியாகத்தைச் செய்யத் தயாரா யிருக்கும் அவர்கள், ஆத்ம விஷயங்களில் ஒரு வெற்றியை அடைய அதேபோல் சோதனை செய்யத் துணிய மாட்டார்கள். வெகு காலமாகத் தம் வாழ்வில் கொண்டிருந்த ஆசை நிறைவேறுவதால் உண்டாகும் ஏதோ சில உலக விஷயமான நன்மைகளைப் பெறவேண்டித் தம் சௌகரியம், சௌக்யம், ஓய்வு, கைப்பொருள், இன்னும் தன் மதிப்பு ஆகியவைகளையும்விட்டுவிடுகின்றனர். இவைமுதலான பல்வேறு தியாகங்களை ஈண்டு விரிவாய் ஆராய வேண்டுவதில்லை. அவர்கள் அவ்வாறு தியாகம் செய்வதெப்படி என்றால், தாம் குறித்துக் கொண்ட நன்மையை அநுபவத்தில் கண்கூடாகப் பெற்றுவிடக் கூடும் என்ற நிச்சயத்தினால் எங்க. ஆசைப்பட்ட பொருள் பெறவேண்டிச் சில தியாகங்கள் செய்யவோ கஷ்டங்களுக்கு உட்படவோ நேரினும் பிரயாசைப்பட்டு உழைக்க மிகுந்த ஊக்கங் காட்டுவர். ஆனால் ஆத்ம விஷயங்களில் அவ்வாறு தியாகம் செய்யவும் அவ்வாறு கஷ்டங்களுக்குட்படவும் அத்தகைய துணிவு இல்லாதவராய் நிதான புத்தியைக் காட்டுவர். "இது போதும் - மேற் கொண்டு வேண்டாம்" என்பர். உலகத்தில் மக்களிடைப் பெரும்பாலோரது மனப்பான்மை இஃதேயாம்.

ஆத்ம விஷயங்களில் சீரிய பேறடைய வேண்டி ஏன் அவர்களவ்வாறான முயற்சிகளி லீடுபடும் வாஞ்சை யில்லாதவர்களாயும், தியாகம் செய்யவேண்டி வரும் சோதனைகள் செய்யாது தப்பிச் செல்பவர்களாயு மிருக்கின்றார்கள் என்று தெளியச் சாந்த முற்ற சிந்தனை செய்யவேண்டும். போதிய அறிவின்மை பெரிய காரணமா யிருக்கலாம். அதுவாயின், அந்நிலைமையில் முயற்சியின்மை சற்று மன்னிக்கப்படுவ தொன்றாம். அந்த அறிவின்மையாகிய நிலையைத் தாண்டியும், அபாயமான சந்தேகமுற்ற மனமுள்ளவர்களுண்டு. அன்னார் சோதனை செய்து பார்க்கவும் துணியார். அபாயமென்று எதற்கும் அடியெடுத்து வைக்கவும் மறுப்பர். ஆனால் இன்னொரு வகையாருண்டு. அவர் யாவரெனின், ஆத்ம விருத்தியடைந்த சான்றோர்களுடைய உயர் மொழியுரைகளைச் சிரவணம் செய்தும், நாகரிக உலகின் நாநா பக்கங்களில் தோன்றிய சிறந்த இலக்கிய நூல்களைத் தாமே படித்தும் அறிவு படைக்கப் பெற்றோர். அவர்களைப் பற்றி என்ன கூறுவது? அவர்கள் தாம் கேட்கும் தத்துவ நூல்களின் உண்மைகள் சரியே என்று தம் பகுத்தறிவின் முடிபுகளை உரைக்கச் சித்தமா யிருப்பார்கள். அவ்வுண்மைகளிடம் அவர் கொண்ட நம்பிக்கை ஸ்திர பக்தியாகவும் பரிணமித்திருக்கிறது. என்றாலும், தம் பக்தியைக் காரியத்தில் காட்டவல்ல சந்தர்ப்பங்கள் நேரிடுகையில், அவர்கள் இன்னும் தயங்கிப் பின் செல்பவராவர். இஃது ஒரு விநோதமான விஷயமல்லவா? அஃதேதன் என்பதே கடிய வினா வொன்றாம்.

அம்மக்களின் மனோ நிலையைப்பற்றி ஆராயும் போது அது அறிவுக் கெட்டாததாயிருக்கிறது. மேலும் அந்நிலைபடைத்த மக்களின் நேர்மையைச் சந்தேகிக்கவும் இடமுண்டாகிறது. தம் நம்பிக்கைக்கும், பக்திக்கும் முரணான நடத்தை அவருக்கேன்? கட்டுக்களினின்றும் நிலையான விடுதலை அடையவும், உண்மையான நீக்கமில்லா ஆனந்தம் பெறவும் ஆத்மலக்ஷியம் ஒன்றே சத்யமானதென்று அவர் நம்பிய போதிலும், அதைச் சேரும் பாதையில் செல்லும் போது இயற்கையாகவே அங்குள்ள கஷ்டங்களைச் சகிக்கவும் சோதனைகளுக்குத் துணிந்து நிற்கவும் அவருக்கு விருப்பமில்லை என்பது ஒரு காரணம் ஆகலாமோ? மிகுந்த சிரமத்திற்குள்ளாக வேண்டி வருமென்ற அச்சம் அவர் அப்பாதையை நண்ணாது தடுக்குமோ? கண் கூடாகத் தெளியும் உலக வின்பங்களே நிச்சயம், அவைகளைத் தெரிந்தடைதலே சரி எனவும், எதிர் பார்க்கப்படும் சுகங்கள் சரியல்ல வெனவும், அவர் சிந்திப்பரோ? அல்லது சோம்பல் மேலிட்டவராய்த் தாம் அஞ்சிய பாதையை நண்ணுவதற்குப் 'பின்பாகட்டும், பின் பாகட்டும்' என்று காலங் கடத்துவரோ? பல் வகையான அவர் மனப்போக்குகளை அறிவதாதல், அவர்களது இயற்கை சுபாவத்தை அவரே மாற்றிக் கொள்வதைத் தடுப்பதாதல் கடினமானதாம்.

இதிலிருந் தொன்று தெளியப்படும். அதாவது, ஒருவரது நம்பிக்கை - பக்தி இவைகளுக்கேற்றபடி அவர் நடக்கையும் அவசியமிருந்தே தீருவதன் றென்பது. நிச்சய ஞானமாயினும் என்றும் அவர் நடக்கையைப் போதியவாறு மாறுபடுத்துமோ? இல்லை எனில், இலக்ஷியத்தை அடையச் செய்யும்படி அவரது மனோ நிலையை நிச்சயமாக மாற்றவல்லதெது? நம்பிக்கையும் பக்தியும், பரோக்ஷஞானமும் வாய்த்துங் கூட மக்கள் தமக்கு வழக்கமாக ஏற்பட்ட வழிகளில் உழலுவர். அதோடு, துறவு தியாகம் இவைகளை அஞ்சி நீங்குவர். இந்நிலையை நோக்க மனத்துயர முண்டாகிறது. உயர்ந்த ஆத்ம போதனைகளாகிய தீம்புனல் வெள்ளத்தில் அவர் மனம் திளைத்தாடுகையில், அவை அவரைத் தம்முண்மைக்குச் சம்மதிக்கச் செய்வதோடு, இலக்ஷியத்தை யடைவேண்டிய ஆவேசத்தையும் அவர் பால் எழச் செய்யும். ஆனால், போதிய ஊட்டக் குறைவினால் அச்சிறந்த ஆவேச சக்தி குன்றும். மீண்டும் அஃது அவியும் தீபத்தைத் தூண்டி விட்டது போலத் தெரியும் - பளீரென ஒளியும் வீசும் - என்றாலும் விரைவில் அது மங்கிப் பொன்றுவதற்கே. அப்படிப்பட்ட மக்கள் நிலையானது குழப்பமும் அதிருப்தியும் மலிந்த தொன்றாம். காணும் சக்தி பெற்றும் கதிரவனழகினைக் காணக் கண் திறக்க மாட்டாதவராகிய அவர் நிலை பரிதாபத்திற்குரியதன்றோ? அவர் சோம்பி வாளாகிடத்தல் எங்ஙன மென்பதும் கடிய வினாவொன்றன்றோ?

எனக்குத் தோன்றும் உய்யும் வழியொன்றுண்டு. அது யாதெனின், அவர் தம்முள்ள உறுதியை - திட வைராக்கியத்தைப் பெருக வைக்கும் ஆற்றலை அடைய அதிதீவிர முயற்சி செய்வதாம். தம் அறிவைச் செயலில் தெரிவிக்கும்படி அவருள்ளத்தில் ஆழவிருந்து அவரை உந்தும் திட விருப்பமே இவ்வுறுதி அல்லது வைராக்கிய மென்பது.

அவ்வைராக்யத்தைப் பெற்றாலே அவர் நம்பிக்கை - பக்தி - நிச்சயஞானம் ஆகியவைகளின் பயனைப் பெறுபவராவர். இல்லையேல், அவர் அறிவுடைமை யாவும் புல்லுக்கிரைத்த நீரெனவும், கடலிற் பெய்த மழையெனவும், பாலை வனத்திற்பொழியும் நிழலெனவுமாகும்.

---

இலங்கை கட்டுகாஸ் தோட்டையிலுள்ள முகம்மது சாயபு என்பான் அடி பசு ஒன்றைச் சித்திரவதை செய்ததாகக் குற்றஞ் சாட்டப்பட்டான். அந்தப் பசு படுத்திருக்கையில் எதிரி அதன் வாலை முறுக்கி இழுத்ததனால், வாலின் தோல் உரிந்து விட்டதாம். மாத்தளை நீதிபதி அவனுக்கு ரூ 75 அபராதம் விதித்தார்.

o o o

பம்பாயிலிருந்து நாகைக்கு ரயில் பிரயாணஞ்செய்து கொண்டிருந்த ஓர் ஆங்கிலோ இந்தியமாது ரயில் ஓடிக்கொண்டிருக்கும் போதே ஓர் ஆண்குழந்தையைப் பெற்றாளாம்.

o o o

வங்காளத்தில் மைமென்சிங் என்னும் பிரிவின் இரகசியப் போலீஸ் சூப்பரிண்டெண்டான மிஸ்டர் ஜான்ஸ்டன் பிரும்மபுத்திரா நதியில் கண்ட 15 அடி நீளமுள்ள ஒரு முதலையைத் துப்பாக்கியால் சுட்டார். உடனே அப்பிராணி நீரினுள் மூழ்கிவிட்டது. மறநாள் மேலே பிணமாக மிதந்து கொண்டிருந்தது.


கவலை யில்லை! இனிக் கவலை யில்லை!

**ஸ்ரீகிருஷ்ண லீலாமிர்தம்**

தோன்றிவிட்ட பின்னருமா வாலிபர்களுக்குக் கவலை இருக்கப்போகிறது? பால்ய சேஷ்டையாலும் மற்றும் பல காரணங்களாலும் ஏற்படும் எத்தகைய தாது நஷ்டத்தையும் போக்கி நரம்புகளை முறுக்கேற்றி இன்ப சுகத்தைத் தரும். நீர் சுருக்கு, மூளை கொதிப்பு, மறதி, இடுப்புவலி முதலிய பிணிகளைப் போக்கி தேகத்தைப் பலப்படுத்தும். இது சிறந்த ஆயுர்வேத வைத்தியரால் தயாரிக்கப்படுவது.

40 மாத்திரைகளின் விலை 5 ரூபாய்தான்

பாராயணத் திருப்புகழ்:—இதில் மிகச் சிறந்த 325 திருப்புகழ் பாடல்கள் பொறுக்கி எடுத்து வெளியிடப்பட் டிருக்கின்றன. இது பாராயணத்துக்கேற்ற முறையில் செப்பஞ் செய்யப்பட் டிருக்கிறது: இதில் பல அழகிய படங்கள் மிளிர்கின்றன. விலை ரூபா 1-0-0 தான்.

விலாசம்:—இண்டோ மலாயன் ஸ்டோர்ஸ்,

நெ. 2, பிலிப்ஸ் தெரு, ஜி. டி., மதராஸ்.



**முருகவேள் பனுவல் திரட்டு**

[இரண்டாம் பதிப்பு]

சுப்பிரமணிய பக்தர்கள் பாராயணஞ் செய்தற்குரிய சிறந்த நூல்

இதில், திருப்புகழ், திருவகுப்பு, கந்தரலங்காரம், கந்தரனுபூதி, கந்தரந்தாதி, கந்தர் கலிவெண்பா, கந்தர்சஷ்டி கவசம், திருமுருகாற்றுப்படை, முத்துக்குமாரசாமி பிள்ளைத் தமிழ், திருச்செந்தூர்ப் பிள்ளைத் தமிழ், திருவிரிஞ்சை முருகன் பிள்ளைத் தமிழ், திருப்போரூர் சந்நிதி முறை, திருத்தணிகை சந்நிதிமுறை, கந்த புராணம், தணிகைப் புராணம், திருச்செந்தூர்ப் புராணம் முதலிய நூல்கள் அடங்கி யிருக்கின்றன. இப்பதிப்பில் பல பாக்கள் அதிகமாகச் சேர்க்கப்பட்டிருக்கின்றன. உயர்ந்த காகிதம். அழகிய பயிண்டு. விலை ரூபா 1-0-0.

முருகவேள் புத்தகசாலை,

இராயப்பேட்டை, சென்னை.



**திருக்குறள்**

பதம் பிரித்த மூலமும் அதற்கிணங்கிய பொழிப்புரையும்

நான்கு அணாவிற்கு முன்னூறுக்கு மேற்பட்ட பக்கங்கள்

வெகு குறைந்த விலை! மிக நல்ல உரை!

சுத்தமான பதிப்பு கிளேஸ் காகிதம் தூய தமிழ்

வெகு சொற்ப பிரதிகளே அச்சிடப் பெறுகின்றன. நவம்பர்மீ 30உக்குள் தபால் செலவு 0—1—6 சேர்த்து 0—5—6 தபால் பில்லைகள் அனுப்புவோர்க்கே மேற்குறித்த விலை. பிறகு பிரதி ஒன்றுக்கு 8 அணா விலை. தபால் செலவும் வேறு. குறித்த அளவிற்கு மேல் ஆர்டர் வந்தால் ஸ்டாம்புகளைத் திருப்பி அனுப்பி விடுவோம். ஆகையால் இன்றே ஆர்டர் செய்ய முந்துங்கள். பிறகு வருந்துவதில் பயனில்லை.

பொங்கல் புது நாளன்று புஸ்தகங்களைப் பெறுவீர்கள்.

தமிழ் நூற்பதிப்புக் கழகம்,

48, நெல்லுக்காரத் தெரு, காஞ்சீபுரம்.



ரிஜிஸ்டர் செய்தது.

பொன், வெள்ளி மெடல்கள்பெற்ற மெடிகேடட் No. 1. ஏ.ஜே.

**பரிமள மூக்குத்தூள்**

இந்த பெயர்பெற்ற No. 1 ஏ. ஜே. பரிமள மூக்குத்தூள் நூதனமாய்க் கண்டுபிடிக்கப்பட்டது. இது வெகுபேர்களால் வாங்கி உபயோகித்து ஆயிரக்கணக்கான நற்சாட்சிப் பத்திரம் பெற்றிருக்கிறது. இந்த மேலான தூளினால் தீரும் வியாதிகளாவன:—ஜலதோஷம், பீனிசம், ஒற்றைத்தலைநோய், மண்டைகுத்தல் எல்லா வியாதிகளையும் சொஸ்தப்படுத்தி விடும். இதை உபயோகித்துப் பாருங்கள்.

புட்டி 1-க்கு 0-4-0 டஜன் 1-க்கு 2-4-0 சேர் 1-க்கு (24 தோலா) 1-9-0

கனதனவான்களுக்குத் தெரிவிப்பது

No. 1 A. j. சாயபு பட்டணம்பொடியை வாங்கி உபயோகியுங்கள். இந்தப்பொடி கம்பெனியானது 30 வருஷ காலமாக மதராஸ் சவுகார்பேட்டையில் நடத்திவருகிறது. கனதனவான்களுக்குத் தெரிந்திருக்கும். ஆகையால் பலவாறு கூறுவதில் பிரயோசனமில்லை. ஒரு தடவை தருவித்துப் பார்த்தால் உண்மை விளங்கும்.

சாதாபொடி வீசை 1-க்கு 3-4-0. மேற்படி ½ வீசை 60 தோலா 1—11—0

மேற்படி சேர் 1-க்கு 0—11—0

இந்த விலைக்கு அகப்படும். மொத்தமாய் தருவிக்கும் வியாபாரிகளுக்குத் தக்க கமிஷன் கொடுக்கப்படும். தபால் மூலம் எழுதி தெரிந்துகொள்ளலாம்.

ஆர்டர் செய்பவர்களுக்கு 80 பக்கமுள்ள ஏ. ஜெ. பரிமள மூக்குத்தூள் காவடிச்சிந்து திருப்புகழ் இனாம். சொற்ப பிரதிகளே கைவசமுளது.

சீ. ஜெயினுலாப்தின் சாயபு,

நெ. 104, 105, தங்கசாலை வீதி, சௌகார்பேட்டை, சென்னை.




# காந்தியடிகள்

## உண்மையோடியைந்தவாழ்வு

பாகம் 5 அத்தியாயம் 31

மறக்கொணச் சம்பவங்கள் I

தென்னிந்திய சுற்றுப் பிரயாணத்தைச் சுருக்கமாக முடித்துக்கொண்டு பம்பாய்க்குத் திரும்பினேன். ஏப்ரல் மாதம் 6-ந் தேதி கொண்டாட்டங்களுக்காக நான் அங்கே வந்து சேர்ந்து விடவேண்டுமென்று ஸ்ரீ சங்கர் லால் பாங்கர் தந்தி அனுப்பி யிருந்தார். ஏப்ரல் மாதம் 4-ந் தேதி அங்குப் போய்ச் சேர்ந்ததாக நினைவிருக்கிறது.

ஆனால் இதற்கு முன்பே மார்ச்சு மாதம் 30-ந் தேதி யன்று டில்லியில் ஹர்த்தால் நடந்துவிட்டது. அங்கே சுவாமி சிரத்தானந்தரும், காலஞ் சென்ற ஹக்கீம் அஜ்மல் கான் சாகிபுவும் வைத்ததுதான் சட்டம். ஹர்த்தால் ஏப்ரல் மாதம் 6-ந் தேதிக்குத் தள்ளி வைக்கப்பட்டிருக்கிற தென்னும் செய்தி அங்கே தாமதமாகச் சேர்ந்தது. இதற்கு முன்பு இத்தன்கைய ஹர்த்தால் டில்லியில் நடந்ததேகிடையாது. இந்துக்களும் முஸ்லீம்களும் ஒரே மனிதனைப் போல் ஒற்றுமைப் பட்டிருந்ததாகக் காணப்பட்டது. ஜும்மா மசூதியில் உபந்நியாசம் செய்யும்படி சுவாமி சிரத்தானந்தரை அழைத்திருந்தார்கள். அவரும் அவ்வாறே சென்று உபந்நியாசஞ் செய்தார். இவற்றை யெல்லாம் அதிகாரிகளால் பொறுக்க முடியாமல் போயிற்று. ஹர்த்தால் ஊர்வலம் ரயில்வே ஸ்டேஷனை நோக்கிச் சென்றபோது போலீசார் அதைத் தடுத்துத் துப்பாக்கிப் பிரயோகம் செய்தனர். அதன் பயனாகச்சில உயிர்ச்சேதங்கள் நிகழ்ந்தன. டில்லியில் அடக்குமுறை ஆட்சி துவங்கப் பட்டது. சிரத்தானந்தர் என்னை அவசரமாக டில்லிக்கு வரும்படி அழைத்திருந்தார். பம்பாயில் ஏப்ரல் மாதம் 6-ந் தேதி கொண்டாட்டங்கள் முடிவுற்றதும் டில்லிக்கு உடனே புறப்படுவதாகப் பதில் தந்தி யடித்தேன். டில்லியில் நடந்த அதே சம்பவங்கள் லாகூரிலும் அமிருத சரஸிலும் நேரிட்டன. அமிர்த சரஸிலிருந்து டாக்டர் சத்திய பாலும் டாக்டர் கிச்லுவும் உடனே அங்கு வந்து சேரும்படி வற்புறுத்தி அழைத் திருந்தார்கள். அச்சமயம் அவர்கள் இன்னாரென்றே எனக்குத் தெரியாது. ஆயினும் டில்லியிலிருந்து அமிர்தசரஸுக்கு வருவதாக அவர்களுக்குச் செய்தி அனுப்பினேன்.

### மசூதியில் உபந்நியாசம்

6-ந்தேதி காலை பம்பாய் நகர வாசிகள் ஆயிரக்கணக்காக வந்து 'சௌபாத்தி' கடற்கரையில் நீராடினார்கள். பின்னர் அவர்கள் ஊர்வலமாகக் கிளம்பி தாகூர் துவாரத்துக்குச் சென்றார்கள். ஊர்வலத்தில் ஸ்திரீகளும் குழந்தைகளும் ஆங்காங்குக் காணப்பட்டனர். முஸ்லீம்கள் பெருந்தொகையினராக அதில் கலந்து கொண்டனர். தாகூர் துவாரத்தை யடைந்த பின்னர் எங்களில் சிலரை முஸ்லீம் நண்பர்கள் அருகிலிருந்த மசூதிக்கு அழைத்துச் சென்றனர். நானும் ஸ்ரீமதி சரோஜனி தேவியும் அங்கே உபந்நியாசம்செய்தோம். அவ்விடத்திலேயே ஜனங்களைச் சுதேசிய விரதமும் இந்து முஸ்லீம் ஒற்றுமைப் பிரதிக்ஞையும் எடுத்துக்கொள்ளச் செய்ய வேண்டுமென்று ஸ்ரீ வித்தல்தாஸ் ஜீராஜானி சொன்னார். ஆனால் அதற்கு நான் இணங்கவில்லை. பிரதிக்ஞைகளை அவ்வளவு அவசரமாக எடுத்துக்கொள்ளச் செய்தல் தவறென்றும், ஜனங்கள் ஏற்கனவே செய்துள்ள காரியங்களை முதலில்கவனித்துஅவை திருப்தியளித்தால் தான் அவர்களைப் பிரதிக்ஞை ஏற்கச்செய்யலாமென்றும் நான் கருதினேன். ஒரு முறை செய்துவிட்ட பிரதிக்ஞையைப் பின்னர் எக்காலத்தும் மீறலாகாதென்றும் எனவே சுதேசி விரதத்தின் உட்கருத்துக்களையும் இந்து முஸ்லீம் பிரதிக்ஞையின் பெரும் பொறுப்பையும் அனைவரும் நன்குணர வேண்டுமென்றும் நான் எடுத்துக் காட்டினேன். முடிவில் பிரதிக்ஞை செய்ய விரும்புவோர் அனைவரும் மறுநாள் காலையில் அதற்காக ஓர் இடத்தில் கூட வேண்டுமென்று தெரிவித்தேன்.

### பூரண வெற்றி

பம்பாயில் ஹர்த்தால் பூரண வெற்றியுடன் நடந்ததென்று சொல்ல வேண்டுவதில்லை. சட்ட மறுப்பு தொடங்குவதற்கு எல்லா ஏற்பாடுகளும் செய்திருந்தோம். இது சம்பந்தமாக இரண்டொரு விஷயங்கள் விவாதிக்கப் பட்டிருந்தன. ஜனத்திரளினால் எளிதில் மீறக்கூடிய சட்டங்களை மறுக்க வேண்டுமென்பதாகத் தீர்மானிக்கப்பட்டது. உப்பு வரி ஜனங்களால் மிகவும் வெறுக்கப்பட்டதொன்று. கொஞ்சகாலமாக அவ்வரியையரத்து செய்யப் பெரு முயற்சி நடந்து வந்தது. ஆதலின், ஜனங்கள் உப்புவரிச்சட்டத்தைமீறிக் கடலிலிருந்து தண்ணீர் கொண்டு போய் வீட்டில் உப்புஉற்பத்தி செய்யலாமென நான்சொன்னேன். அரசாங்கத்தினால் தடைக்குள்ளான பிரசுரங்களை விற்கலாமென்பது என்னுடைய மற்றொரு யோசனை. என்னுடைய புஸ்தகங்களில் 'இந்திய சுயராஜ்யம்', 'சர்வோதயம்' (ரஸ்கின் எழுதிய Unto this Last என்னும் நூலின் மொழி பெயர்ப்பு) என்னும் இரண்டு நூல்கள் ஏற்கனவே தடையுத்திரவுக் குள்ளாயிருந்தன. அவற்றை அச்சிட்டுப் பகிரங்கமாக விற்பனை செய்தல் சட்ட மறுப்புச் செய்வதற்கு மிகச் சுலபமான வழியென்று தோன்றிற்று. ஆதலின் அப்புத்தகங்களின் பிரதிகள் போதிய அளவு அச்சிடப்பட்டன. அன்றுமாலை விரதம்முடித்து உணவருந்திய பின்னர் நடைபெறவிருந்த பெருங் கூட்டத்தில் அவற்றை விற்க ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது.

### சட்ட மறுப்பு

அவ்வாறே 6-ந் தேதி மாலை ஏராளமான தொண்டர்கள் தடுக்கப்பட்ட பிரசுரங்களுடன் வெளிக் கிளம்பினார்கள். நானும் ஸ்ரீமதி சரோஜனியும் மோட்டார் வண்டிகளில் சென்றோம். எல்லாப் பிரதிகளும் விரைவிலேயே செலவழிந்து விட்டன. விற்பனைப் பணத்தைச் சட்டமறுப்பு இயக்கத்துக்காகவே செலவழிக்கத் தீர்மானித்திருந்தோம். இரண்டு புத்தகங்களுக்கும் பிரதி ஒன்றுக்கு நான்கணா விலை வைக்கப்பட்டிருந்தது. ஆனால் என்னிடமிருந்து ஒருவரேனும் அந்த விலைக்குப் புத்தகம் வாங்கியதாக எனக்கு ஞாபகமில்லை. எவ்வளவோ பேர் தங்களுடைய சட்டைப் பைகளிலிருந்த பண முழுவதையும் கொடுத்துப் புத்தகம் வாங்கிக் கொண்டார்கள். ஒரு பிரதிக்காக ஐந்து ரூபா பத்து ரூபா நோட்டுகள் சர்வ சாதாரணமாய் வந்து விழுந்தன. ஒருவர் ஐம்பது ரூபா கொடுத்து ஒரு பிரதி வாங்கிக் கொண்டதாகவும் ஞாபகமிருக்கிறது. தடையுத்திரவுக்குள்ளான இப்புத்தகங்களை வாங்குவதால் ஜனங்கள் சிறைக்கனுப்பப் படலாமென்று அவர்களுக்குத் தெளிவாக எடுத்துரைக்கப்பட்டது. ஆனால் அந்த நிமிஷத்தில் சிறைச்சாலை பயத்தையே அவர்கள் அடியோடு ஒழித்து விட்டிருந்தார்கள்.

இது சம்பந்தமாக அரசாங்கத்தார் ஒரு சௌகரியமான கொள்கையை மேற்கொண்டதாகப் பின்னால் தெரிய வந்தது. உண்மையில் தடைக்குள்ளான புத்தகங்கள் விற்கப்படவில்லை யென்றும், நாங்கள் விற்ற புத்தகங்கள் "தடுக்கப்பட்ட பிரசுரங்கள்" ஆகாவென்றும் அவர்கள் கருதினார்களாம். தடைக்குள்ளான புத்தகங்களின் மறு பதிப்பை விற்பது சட்டப்படி குற்றமாகாது என்று அரசாங்கத்தார் கொண்டனர். இச்செய்தி பெரிதும் ஏமாற்றமளித்தது.

### மின்னுவதெல்லாம் பொன்னல்ல

மறுநாள் காலையில் சுதேசி விரதமும், ஹிந்து முஸ்லிம் ஒற்றுமைப் பிரதிக்ஞையும் மேற்கொள்வதற்காக வேறொரு கூட்டம் நடந்தது. மின்னுவதெல்லாம் பொன்னல்ல என்பதை விதல்தாஸ் ஜீராஜானி முதன் முதலில்இப்போதே உணர்ந்தார். இக்கூட்டத்திற்குச் சொற்ப ஜனங்களே வந்திருந்தார்கள். அவர்களில் சகோதரிகள் சிலர் இருந்தனர். அச் சிலரை எனக்கு நன்றாய் ஞாபகமிருக்கிறது. கூட்டத்துக்கு வந்த ஆண் மக்களும் சிலரேயாவர். நான் பிரதிக்ஞையை ஏற்கனவே தயாரித்துக்கொண்டு வந்திருந்தேன். வந்திருந்தவர்களுக்கு அதன் பொருளை நன்கு விளக்கிக் கூறினேன். இக்கூட்டத்திற்கு ஜனங்கள் குறைவாக வந்திருந்தது எனக்குத் துயரமாவது வியப்பாவது அளிக்கவில்லை. ஏனெனில் ஜனங்களின் மனப்பான்மையில் இந்தக் குறிப்பான வேற்றுமையை நான் முன்னமே கவனித்திருந்தேன். கிளர்ச்சி தரும் வேலையென்றால் அவர்களுக்கெப்போதும் பிரியம். அமைதியான நிர்மாண வேலையென்றால் வெறுப்புத்தான். இவ்வேற்றுமை இன்றளவும் இருந்து வருகிறது.

ஆனால் இவ்விஷயத்தைப்பற்றி ஒரு தனி அத்தியாயம் நான் எழுத வேண்டும். எனவே, கதைத் தொடர்ச்சிக்குத் திரும்புவோம். 7-ந் தேதி இரவு நான் டில்லி வழியாக அமிர்தசாஸ் போகும் எண்ணத்துடன் புறப்பட்டேன். 8-ந் தேதி மதுரா யடைந்ததும் நான் கைது செய்யப்படலாமென்னும் வதந்தியை முதன் முதல் கேள்வியுற்றேன். ரயில்நின்ற அடுத்த இடத்தில் ஆசிரியர் கித்வானி என்னைக் காணவந்தார். நான் கைது செய்யப்படுவது நிச்சயமென்று அவர் திட்டமாகத் தெரிவித்ததுடன் நான் இட்டவேலை செய்யத் தாம் சித்தமாயிருப்பதாகவும் கூறினார். நான் அவருக்கு வந்தனமளித்து, அவசியமான போது அவருக்கு வேலையிடத் தயங்க மாட்டேனென்று கூறினேன்.

### தடையுத்திரவு

வண்டி பால்வால் ஸ்டேஷனை அடைவதற்கு முன்னால் எழுத்து மூலமான உத்திரவு ஒன்று எனக்களிக்கப் பட்டது. நான் பஞ்சாபுக்குச் செல்வதால் அமைதிக்குப் பங்கம் நேரிடக் கூடுமாதலின், அம்மாகாணத்தின் எல்லைக்குள் நான் புகுதல் கூடாதென்று அதில் கண்டிருந்தது. போலீசார் என்னை வண்டியிலிருந்து கீழிறங்கும்படி சொன்னார்கள். நான் அப்படிச் செய்ய மறுத்தேன். "அவசரமான அழைப்பு வந்துள்ளபடியால், நான் பஞ்சாபுக்குச் செல்கிறேன். அங்கே அமைதிக்குக் கேடு சூழ்வதற்காகவன்று; அமைதி காப்பதற்கே போகிறேன். ஆதலின், இவ்வுத்தரவுக்கு இணங்க இயலாமைபற்றி வருந்துகிறேன்" என்று சொன்னேன்.

கடைசியில், வண்டி பால்வால் ஸ்டேஷனை அடைந்தது. மகாதேவ் தேஸாய் என்னுடன் வந்து கொண்டிருந்தார். டில்லிக்குச் சென்று சுவாமி சிரத்தானந்தரிடம் இங்கு நிகழ்ந்ததைச் சொல்லும்படியும், ஜனங்களை அமைதியாய் இருக்குமாறு கேட்டுக் கொள்ளும் படியும் அவரிடம் சொன்னேன். எனக்களிக்கப்பட்ட உத்திரவிற்கு நான் கீழ்ப்படிய மறுத்தது ஏன் என்பதையும், எனக்கு எத்தகைய தண்டனை அளிக்கப்பட்டாலும் ஜனங்கள் மட்டும் பூரண அமைதியுடனிருந்தால் நாம் நிச்சயம் வெற்றியடைவோ மென்பதையும் விளக்கிக் கூறும்படி அவரைக் கேட்டுக் கொண்டேன்.

### போலீஸ் காவலில்

பால்வால் ஸ்டேஷனில் என்னை வண்டியிலிருந்து இறக்கிப் போலீஸ் காவலில் வைத்தார்கள். விரைவில் டில்லியிலிருந்து ஒரு வண்டி வந்தது. அதில் மூன்றாம் வகுப்பு வண்டி ஒன்றில் நான் ஏற்றப்பட்டேன். போலீசாரும் உடன் வந்தனர். மதுரா சேர்ந்ததும் என்னைப் போலீஸ் காரியாலயத்துக்கு அழைத்துச் சென்றனர். ஆனால் அடுத்தாற்போல் என்னை என்ன செய்ய உத்தேசம், அல்லது எங்கேகொண்டு போகப் போகிறார்கள் என்பதாகப் போலீஸ் உத்தியோகஸ்தர் எவரும் எனக்குத் தெரிவிக்கக்கூடவில்லை. மறுநாள் அதிகாலையில் என்னை எழுப்பிப் பம்பாய்க்குப் போய்க் கொண்டிருந்த ஒரு சாமான் வண்டியில் ஏற்றினார்கள். உச்சிப்பொழுதில் மாதோப்பூர் ஸ்டேஷனில் மீண்டும் வண்டியிலிருந்திறக்கப்பட்டேன். லாகூரிலிருந்து மெயில்வண்டியில்வந்த போலீஸ் இன்ஸ்பெக்டர் மிஸ்டர் பௌரிங் இப்போது என்னைத் தம் வசம் ஏற்றுக்கொண்டார். அவருடன் முதல் வகுப்பு வண்டியில் ஏற்றப்பட்டேன். இவ்வாறு சாதாரணக் கைதியிலிருந்து பெரிய மனிதக் கைதியானேன். அவ்வுத்தியோகஸ்தர் ஸர் மைக்கேல் ஓட்வியரின் புகழைப் பாடத் தொடங்கினார். சர் மைக்கேலுக்கு என் மீது எவ்வித விரோத பாவமும் கிடையாதென்றும், நான் பஞ்சாபுக்கு வந்தால் அமைதிக்குப் பங்கம் விளையுமென அஞ்சுவதே தடை யுத்தரவுக்குக் காரண மென்றும், இன்னும் பல வாறாகவும் அவர் பேசினார். முடிவில் என்னைத் தானாகவே பம்பாய்க்குத் திரும்பி விடும்படியும் பஞ்சாப் எல்லைக்குள் வராமலிருக்க ஒப்புக்கொள்ளும் படியும் கேட்டுக் கொண்டார். நான் அவ்வுத்திரவுக்கு இணங்க இயலாதிருக்கிற தென்றும், நானாகத் திரும்பிப் போகச் சித்தமாயில்லை யென்றும் பதில் அளித்தேன். அதன் மேல் அவ்வுத்தியோகஸ்தருக்கு வேறு வழி இல்லாமற் போகவே என்மீது சட்டத்தைப் பிரயோகித்தே ஆகவேண்டுமென்று தெரிவித்தார். என்னை என்னதான் செய்யப் போகிறீர்கள் என்று கேட்டேன். அது தமக்கும் தெரியா தென்றும், மேல் உத்திரவை எதிர்பார்த்துக் கொண்டிருப்பதாகவும் அவர் பதிலளித்தார் "தற்போதைக்கு உங்களைப் பம்பாய்க்கு அழைத்துச் செல்கிறேன்" என்றார்.

### ஜனங்களின் கோபம்

இவ்வாறு நாங்கள் சூரத்துக்குப் போய்ச் சேர்ந்தோம். இங்கே வேறொரு போலீஸ் உத்தியோகஸ்தரிடம் நான் ஒப்புவிக்கப் பட்டேன். நாங்கள் பம்பாய் சேர்ந்ததும் "நீங்கள் இப்போது சுயேச்சை அடைந்துவிட்டீர்கள்." என்று அவர் தெரிவித்து, "ஆனால் மேரின் லைனுக் கருகில் நீங்கள் இறங்கி விட்டால் நலம். உங்களுக்காக வண்டியை நிறுத்தச் சொல்கிறேன். கொலாபாவில் பெருங்கூட்டம் கூடியிருக்கக்கூடும்" என்றார். அவர் விருப்பத்தின்படி செய்ய எனக்கு மிகவும் சந்தோஷந்தான் என்று சொன்னேன். இதனால் அவர் மகிழ்ச்சி யடைந்து எனக்கு வந்தனங் கூறினார். அவ்வாறே மேரின் லயன் ஸ்டேஷனில் நான் இறங்கினேன். நண்பர் ஒருவரின் வண்டி அந்தப் பக்கம் போய்க் கொண்டிருந்தது. அவ்வண்டியிலேறி ரேவாசங்கர் ஜாவேரியின் வீட்டை யடைந்தேன். நான் கைதி செய்யப்பட்ட செய்தி ஜனங்களுக்குப் பெருங் கோப மூட்டி அவர்களை வெறி கொண்டவர்களாகச் செய்திருக்கிறதென்று அந்நண்பர் தெரிவித்தார். "பிதுனிக் கருகில் ஒவ்வொரு நிமிஷமும் கலக மூண்டாகலாமென்று எதிர் பார்க்கக் கூடிய நிலைமை ஏற்பட்டிருக்கிறது. மாஜிஸ்டிரேட்டும் போலீசாரும் அங்கு இதற்குள்ளாகவே போய் விட்டார்கள்" என்று அவர் சொன்னார்.

நான் ரேவா சங்கரின் வீட்டையடைந்த தட்சணமே உமார் சோபானியும், அநசூயா பாயும் அங்குவந்து என்னை உடனே பிதுனிக்கு வருமாறு கேட்டுக் கொண்டார்கள். "ஜனங்கள் பொறுமையிழந்து பெரிதும் பரபரப் படைந்திருக்கிறார்கள். எங்களால் அவர்களைச் சமாதானப் படுத்த முடியவில்லை. நீங்கள் நேரில் வந்தால் மட்டுமே அது முடியும்" என்று அவர்கள் கூறினார்கள்.

### பயங்கரக் காட்சி

உடனே மோட்டாரில் ஏறினேன். பிதுனிக்கருகில் பிரம்மாண்டமான கூட்டம் கூடியிருப்பதைக் கண்டேன். என்னைப் பார்த்ததும் ஜனங்கள் மகிழ்ச்சிப் பெருக்கினால் பித்தம் கொண்டவர்கள் போலானார்கள். உடனே ஊர்வலம் ஒன்று அமைக்கப்பட்டது. "வந்தேமாதரம்" "அல்லாஹு அக்பர்" என்னும் கூக்குரல் வானளாவிற்று. பிதுனியில் போலீஸ் படையொன்று எங்களுக்குப் புலனாயிற்று. ஆகாயத்திலிருந்து செங்கற்கள் பொழிந்து கொண்டிருந்தன. கூட்டத்தை அமைதியா யிருக்கும்படி நான் வேண்டிக் கொண்டேன். ஆனால் செங்கல் மழையிலிருந்து நாங்கள் தப்பமுடியா தென்று தோன்றிற்று. ஊர்வலம் அப்துர் ரஹிமான் தெருவிலிருந்து வெளியே வந்து கிராபோர்டு சந்தையை நோக்கிப் போகவிருந்த தருணத்தில் திடீரென்று குதிரைப்போலீஸ் படை கூட்டத்தின் முன் எதிர்ப்பட்டது. ஊர்வலம் கோட்டையை நோக்கிச் செல்லா வண்ணம் தடுப்பதற்காக அக்குதிரைப் போலீசார் வந்திருந்தனர். ஜனக்கூட்டமோ ஊசி விழவும் இடமின்றி நெருங்கி யிருந்தது. ஏறக் குறைய போலீஸ் அணியை ஜனங்கள் பிளந்து விட்டார்கள். அப்பெருங் கூட்டத்தில் என்னுடைய குரல் கேட்டல் அசாத்தியமே யன்றோ? அத்தருணத்தில் குதிரைப் போலீசாருக்குத் தலைமை வகித்த உத்தியோகஸ்தர் கூட்டத்தைக் கலைக்கும்படி உத்திரவிட்டார். உடனே குதிரைப் போலீஸ் சேவகர் தங்கள் ஈட்டிகளை வீசிக்கொண்டு கூட்டத்தில் புகுந்து தாக்கலாயினர். ஒரு கணநேரம், நான் காயப்படுத்தப் படுவேனோ வென்று எண்ணினேன். ஆனால் அதற்கு ஆதாரமில்லை யென்று விரைவிலேயே தெரியவந்தது. குதிரை வீரர்கள் வேகமாகப் பாய்ந்து சென்றபோது ஈட்டிகள் மோட்டார் வண்டியைப் பிடித்துக்கொண்டு சென்றதல்லாது வேறு எனக்கொன்றும் தீங்கு நேரவில்லை. ஆனால் ஜனக் கூட்டம் விரைவிலேயே சின்னா பின்னமாக்கப் பட்டது. ஜனங்கள் சொல்ல முடியாத குழப்பமடைந்து நாறுபக்கமும் சிதறி ஓடலானார்கள். சிலர் காலடியில் மிதிக்கப்பட்டனர். வேறு சிலர் பெரிதும் காயமடைந்தனர். மற்றவர்கள் நசுக்குண்டனர். நெருங்கின அந்த ஜனக் கூட்டத்திலே குதிரைகள் செல்வதற்கு இடமே கிடையாது. ஜனங்கள் கலைந்து போவதற்கும் வழிகிடையாது. எனவே குதிரை வீரர்கள் கூட்டத்தினிடையே குருட்டுத் தனமாய் விழுந்து சென்றார்கள். தாங்கள் செய்வதின்னதென்று அவர்களுக்கே தெரிந்திருக்குமென எனக்குத் தோன்றவில்லை. மொத்தத்தில் அக்காட்சி மிகப் பயங்கரமானதொரு காட்சியாயிருந்தது. குதிரை வீரர்களும் ஜனங்களும் வரை துறையில்லாமல் கலந்து பித்தம் பிடித்தவர் போலானார்கள்.

இவ்வாறு கூட்டம் கலைக்கப்பட்டது; அதன் முன்னேற்றம் தடுக்கப்பட்டது. எங்கள் மோட்டாரை மேற்செல்லவிட்டார்கள். கமிஷனர் காரியாலயத்தின் முன் அதை நிறுத்தச்செய்தேன். வண்டியிலிருந்திறங்கிப் போலீஸாரின் நடக்கையைப்பற்றி அவரிடம் தெரிவிக்கச் சென்றேன்.

---

கடந்தவாரம் சென்னைத் தங்கசாலைத் தெருவிலுள்ள 'கில்ட் ஷாப்'பில் வேலை செய்யும் அப்துல் காசிம் என்னும் 15 வயதுள்ள பையன் நைட்ரிக் ஆசிட்திராவகமிருந்த புட்டியைத் தண்ணீர் புட்டி என்று நினைத்து அதிலிருந்த திராவகத்தைக் குடித்ததினால் மரணமடைந்தானும்.

o o o

ஆமதாபாத்தில் சமீபத்தில் 19-வயதுள்ள யூஜன்லாரன்ஸ் என்பார் ஒரு வாத்தைச் சுட்டார். அது சமீபத்திலிருந்த குளத்தில் விழுந்துவிட்டது. எனவே அதை எடுக்க அவ்வாலிபர் குளத்தில் இறங்கி நீந்தும் போது கொடிகளில் சிக்கிக்கொண்டு தண்ணீரில் மூழ்கிப் பரிதாப மரணமெய்தினார்.

எவ்வுயிர்க்கும் அன்பாயிரு

நவசக்தி

நாமார்க்கும் குடியல்லோம் நமனையஞ் சோம் நரகத்தி லிடர்ப்படோம் நடலையில் லோம், ஏமாப்போம் பிணியறியோம் பணி வோமல்லோம் இன்பமே யெந்நாளுந் துன்ப மில்லை, தாமார்க்குங் குடியல்லாத் தன்மை யான சங்கரனற் சங்கவெண் குழையோர் காதிற், கோமாற்கே நாமென்றும் மீளாவா ளாய்க் கொய்ம்மலர்ச்சே வடியிணையே குறுகி னோமே.—(அப்பர்.)

சென்னை 1928ஹூ நவம்பர்மீ 21உ

## இமயம் சாய்ந்ததோ?

இமயமுஞ் சாய்ந்ததோ? சிந்துவும் வறண்டதோ? என்று அலறுகிறோம்; அழுகிறோம்; அலமருகிறோம். தலைவருள் இமயமாய், பக்தருள் சிந்துவாய் விளங்கிய நமது லஜபதியும் நம்மை விட்டுப் பிரிந்தார்.

பாஞ்சால சிங்கத்தை - பாரத வீரத்தை - அஞ்சா நெஞ்சை - ஆண்டகைமையை - தியாக வள்ளலை - கல்விக் கரசை - நமது லஜபதியை - இனி என்றே காண்போம்! பாஞ்சாலியின் அழுகை என்றே நீங்கும்! பாரததேவியின் புலம்பல் என்றே நிற்கும்! லஜபதி போன்ற தலைவரை - தேசபக்தரை - நாம் என்றே பெறுவோம்! உன்ன உன்ன ஊன் உருகுகிறது; உள்ளங் குழைகிறது.

பாரத மக்களே! நமது ஆருயிர் லாலா லஜபதிராய் எங்ஙனம் மாண்டார்? உன்னி உன்னி உருகுங்கள். நோய் வாய்ப்பட்டா? படுக்கையில் பன்னாள் புரண்டா? ஆ! ஆ! நெஞ்சந் துடிக்கிறது.

சைமன் குழு லாகூர் போந்தபோது, உரிமைப் போர்க்களத்தில், புறமுதுகிட்டு ஓடாமல், போலீஸ் அதிகாரியின் தடி அடியால், மார்பில் காயந் தாங்கி, வீரகர்ச்சனையுடன் நமது சிங்க ஏறு வீரசுவர்க்கம் புகுந்தது. இவ்வாறு நாட்டுக்காக எந்தத் தலைவர் உயிர் துறந்தார்? கிழவயதில் அஞ்சா நெஞ்சுடன் பாரத நாட்டு உரிமைப் போரில் இன்னுயிர் துறந்த லஜபதியின் தேசபக்தியை - வீரத்தை - எங்ஙனம் புகழ வல்லோம்?

லாலாலஜபதிராய் எதற்கெனப் பிறந்தாரோ, எதற்கெனக் கற்றாரோ, எதற்கென உழைத்தாரோ அதற்கெனச் சிறைபட்டார்; அடிபட்டார்; உயிர் துறந்தார். அவர் வீரத்தில் பிறந்து, வீரத்தில் வளர்ந்து, வீரத்தில் உயிர் நீத்தார். லஜபதியின் வீர வாழ்வு உலகிற்கு ஓர் இலக்கியமாகப் பொலிகிறது.

லாலா லஜபதிராய் 1895 - ம் ஆண்டு இவ்வுலகில் பிறந்தார்; பிறந்து கற்க வேண்டுவனவற்றைக் கற்றார்; இல்லறம் பூண்டார்; வக்கில் தொழில் செய்தார். அவ்வளவோடு அவர் வாழ்வு முடிந்து விடவில்லை. பின்னே அவர் தொழில் முதலியவற்றை விடுத்து "நாடு நாடு" என்று சேவையி லிறங்கினார். அவர் தமது கல்வியை நாட்டின் உரிமைக்குப் பயன் படுத்த முயன்றார். நாட்டின் உரிமை யென்று லாலா லஜபதிராய் வெறுங் கூக்குரலிட்டுக் கொண் டிருந்தாரில்லை. அவர் நாட்டுக் கல்விக்கென உழைத்தார்; சமய ஞானத்துக் கெனப் பாடுபட்டார்; நாட்டுரிமைக்காகத் தமது உடல் பொருள் ஆவி மூன்றையுந் தத்தஞ் செய்தார். லஜபதியின் கல்வியும், சமய ஞானமும், தொண்டும், பிறவும் நாட்டுக்கு எவ்வழியில் பயன் பெற்றன என்று நிறுவிக் காட்டுதற்குச் சான்றுகள் பல வேண்டாம். அதிகாரவர்க்கம் அவர் மீது நாட்டஞ் செலுத்தி 'அருள்' புரிந்த தொன்றே சாலும்.

பாஞ்சால சிங்கத்தை எப்பொழுதாவது அதிகாரவர்க்கம் மறந்ததுண்டா? அதிகாரவர்க்கம் பாலகங்காதர திலகரை யாதல் ஒருபோது மறந்தாலும் மறந்திருக்கும். அது லஜபதியை ஒரு போதும் மறந்திராது. லஜபதி யென்றால் அதிகாரவர்க்கத்துக்கு நடுக்கம். விசாரணை யொன்று மில்லாமல் 1907-ம் ஆண்டு லஜபதியை அதிகாரவர்க்கம் நாடு கடத்தியதும், பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்திலேயே லாலா தமது நிழலையுங் காட்டாது அமெரிக் காவில் பல ஆண்டு வதிந்ததும், ஒத்துழையாமையில் நமது ராயர் சிறைப் பட்டதும், முடிவில் அதிகாரவர்க்கத்திற் சேர்ந்த போலீஸாரால் நமது வீரர் அடியுண்டு மாண்டதும் என்ன காட்டுகின்றன? லஜபதி அதிகாரவர்க்கத்துக்கு ஓர் இடிபோல் இலங்கி வந்தார்.

லஜபதிராய் அதிகார வர்க்கத்துடன் போர் புரிந்து நின்றதுடன், நாட்டிலுள்ள குறைபாடுகளையுங் களைய முயன்று வந்தார். தீண்டாமை விலக்கிற்கும், சாதிவேற்றுமை களைதற்கும், பெண்ணுரிமைப் பேற்றிற்கும் லாலா லஜபதிராய் உழைத்த உழைப்புக்கோர் அளவில்லை. லாலாலஜபதிராய் அமெரிக்காவினின்றும் இந்தியாவில் அடிவைத்ததும் "தொழிலாளர் நலனே நாட்டின் நலன்" என்று முழங்கினார்; தொழிலாளர் காங்கரஸில் தலைமை வகித்தார்; வேறு பல வழிகளிலுந் தொழிலாளர்கட்காகப் பாடுபட்டார். லஜபதியின் தொண்டுகளையும் இயல்புகளையும் நினைக்க நினைக்கக் கண்ணீர் பெருகுகிறது.

லாலா லஜபதிராய் பொறுண்மைமீது கருத்தைச் செலுத்திப் போரிடுவாரே யன்றி மனிதர்மீது காழ்ப்போ பகைமையோ கொண்டு போர் தொடுப்பதில்லை. லஜபதிராய் அதிகாரவர்க்க அமைப்பைச்சாய்த்துப் பொறுப்பாட்சி அமைப்பை யுண்டு பண்ண முயன்றாரேயன்றிப் பிரிட்டிஷ் மக்களிடத்தில் காழ்ப்போ பகைமையோ என்றுங் கொண்டாரில்லை. லஜபதிராய் பொது அமைப்புக்கு எப்பொழுதுங் கட்டுப்பட்டு நடந்தே வந்தார். சூரத் காங்கரஸ் தலைமைப் பதவியைத் தமக்கு வழங்கப் பாலகங்காதர திலகர், அரவிந்தகோஷ் முதலியோர் முயன்ற போதும் அப்பதவி ஏற்க லஜபதிராய் விரும்பினாரில்லை. ஒத்துழையா இயக்கத்தைப் பற்றி லஜபதிராய்க்குச் சிற்சில ஐயப்பாடுகளிருந்தன. போராட்டத்தின் போது அவைகளை அவர் பாராட்டாது சிறை புகுந்து அவ்வியக்கத்துக்கு ஊக்க மூட்டினார். சுயராஜ்யக் கட்சியைத் தொடக்கத்தில் லஜபதி ஆதரித்தார். பின்னே அவர் அக்கட்சியின் சூழ்ச்சி கண்டு அதை விடுத்து நீதி வழி நின்று தேர்தலில் இரண்டிடங்களில் வெற்றிபெற்று, அதன் புன்மையை நாட்டுக் குணர்த்தினார். அந்நாள் தொட்டுப் பண்டித மோதிலால் நேரு லஜபதிராயைத் தாக்கிக்கொண்டே வந்தார். லாலா அவர்கள் அத்தாக்குதல்களைப் பொருட்படுத்தாது, சர்வகட்சி மகாநாட்டில் நேருதிட்டத்துக்கு ஆதரவளித்தார். பெரும்பான்மை, பேர், புகழ் முதலிய சிறுமைகட்குச் சிலர் எளிதில் மனச் சான்றை விற்று விடுவர். நமது லஜபதியோ வானிடிந்து விழினும், தமது மனச் சான்றை அச்சிறுமைகட்கு எளிமையாக்க மாட்டார். தற்போது நாட்டுக்கு வேண்டற் பாலது குடியேற்ற நாட்டுரிமை என்று தமது மனச் சான்று சென்ற வழி அவர் நின்று கடனாற்றியது நேயர்கட்குத்தெரியும். அவர் "சுயேச்சை" என்னும் வீண் கூக்குரலில் சேரவிழைந்தாரில்லை. சைமன் குழுவைப் பகிஷ்கரிக்க வேண்டுமென்று காங்கரஸும் சர்வகட்சி மகாநாடும் பணித்தது அறமென்று கருதி அத்தொண்டில் தாமே நேரில் தலையிட்டுப் போலீஸ் அதிகாரியால் தாக்குண்டு நம் பெரியார் மரணமடைந்தார். இன்னோரன்ன அற இயல்புகள் லாலா லஜபதிராயைப் பெரியராக்கின.

லாலா லஜபதிராய் பாரத நாட்டின் உரிமைக்கென உருத்தாங்கி வந்தவர். அவர் பாரத நாட்டையே பெருந்தெய்வமாகப் போற்றி வந்தார். 1919-ம் ஆண்டு ஓட்வியர் அடக்கு முறைக்கும், டையர் குண்டுக்கும் பாஞ்சாலம் இரையானபோது, நமது லஜபதி அமெரிக்காவினின்றும் தாய் நாட்டை நினைந்து நினைந்து உருகி உருகி உரைத்த மொழிகள் ஈண்டு நினைவிற்கு வருகின்றன. "ஐந்து நதி பாயும் எனது அழகிய நாட்டை எப்பொழுது காண்பேன்? எனக்குச் சிறகில்லையே. சிறகிருப்பின் பறந்து செல்வேனே" என்று நாட்டை நோக்கிக் கண்ணீருகுத்த தேசபக்தர் நமது லஜபதி. அவரது பிரிவை எங்ஙனம் ஆற்றுவோம்!

லஜபதியின் வீரமொழிகளும், வீரச் செயல்களும் நாட்டில் மலையெனவும் நதியெனவும் நிற்கின்றன; ஓடுகின்றன. பாரதநாட்டில் இப்பொழுது தோன்றியுள்ள உரிமை வேட்கைக்கும் - அஞ்சாமைக்கும் மூலமாய் நின்ற மூவருள் நமது லஜபதியும் ஒருவர். லஜபதியின் பிரிவு குறித்து மக்கள் மட்டுமா அழுகிறார்கள்; மாஞ் செடி மலை மேகம் முதலியனவும் அழுவதுபோல் தோன்றுகின்றன. எங்கணும் அழுகை; எங்கணும் புலம்பல்; எங்கணுந் துயரம்.

ஐந்து நதிபாயும் அழகிய நாட்டண்ணலே! முப்பது கோடி மக்களின் ஆருயிரே! லஜபதி! லஜபதி! நும்பிரிவை எங்ஙனம் ஆற்றுவோம்! காலமெல்லாம் நாட்டின் உரிமைக்கென ஊனையும் உயிரையும் பிழிந்து பிழிந்து உயிர் துறந்த பெருமானே! நும்மை எங்ஙனம் மறப்போம்! இறுதிக் காலத்தும் நாட்டின் பொருட்டு அதிகார வர்க்கத்தின் பொல்லாத அடி தாங்கியன்றோ உயிர் நீத்தீர்? முப்பது கோடி மக்கள் தலைவரே! எங்கள் பொருட்டு உயிர் நீத்தீர். நுந் தியாகத்தை எங்ஙனம் மறப்போம்!

பாரத மக்களே! நாம் தொகையில் முப்பது கோடி பேர்; நம் பெருந் தலைவரைப் போலீஸார் தடி அடிக்கு இரையாக்கி விட்டோம். இனி என்செய்வது? நமது கடமை யென்ன? லஜபதியின் நோக்கத்தை நிறைவேற்ற முயலல் வேண்டும். லஜபதியின் பருவுடல் மறைந்தாலும் அவரது சிங்கநோக்கும், தியாகமும், வீரமும் அருவமாக நாடு முழுவதும் பரந்து வீறிடுகின்றன; உங்களைத் தட்டி எழுப்புகின்றன. எழுங்கள்; எழுங்கள். அவைகளின் அறிகுறியாக ஆங்காங்கே லஜபதிக்கு உருவச் சிலை நாட்டுங்கள்; நிலயங்கள் எழுப்புங்கள்; மற்றும் பல அமைப்புக்கள் காணுங்கள். லஜபதி விடுத்துச் சென்ற உரிமைப் போர் தொடுக்க எழுங்கள்; எழுங்கள். உரிமை நாட்டில் லஜபதி போன்ற தலைவர் போலீஸாரால் அடிபட்டு இறப்பரோ? நாட்டின் நிலையை உன்னுங்கள்; உன்னி உன்னி உரிமை வேட்கை கொள்ளுங்கள். கொண்டு எழுங்கள்; எழுங்கள். எழுந்து அஹிம்சா தர்மப்போர் முன்னணியில் நில்லுங்கள். லஜபதிக்கு அமைக்கத் தக்க நினைவுக் குறி இதுவே.

ஆண்டவனே! லஜபதியை அழைத்துக் கொண்டனை; லஜபதி போன்ற ஒரு தலைவரை நல்குக; லஜபதியின் வீரத்தை எங்களிடை நிலை பெறுத்துக.

பயன் கருதாப்பணியாற்றிப் போர்க்களத்தில் வீர முழக்கத்துடன் பரு உடலை நீத்த லஜபதியின் இன்னுயிர் ஆண்டவன் திருவடி நீழலில் ஆறுதலடைவதாக.

## சிங்கம் வீழ்ந்த காரணம்

லாலாஜிக்கு அந்திய காலத்தில் வைத்தியம் பார்த்தவர்களான டாக்டர் தர்மவீரரும், டாக்டர் கோபிசந்தும் மரணத்தின் காரணத்தைப்பற்றித் தனித்தனி அறிக்கை வெளியிட்டுள்ளார்கள். டாக்டர் தர்மவீரர் இங்கிலாந்தில் 27 வருஷகாலம் வைத்தியத் தொழில் நடத்தியவர். அவர் சொல்வதாவது:—"லாலாஜி தூக்கமின்மை முதலிய சில நோய்களால் வருந்திக் கொண்டிருந்த போதிலும், பொதுவாக ரயில்வே ஸ்டேஷனில் அவர் அடிபட்ட நாள்வரை அவர் உடல் நிலை மிகவும் நன்றாயிருந்து வந்தது. அவர் அவமதிப்புகளைச் சிறிதும் பொறாத இயல்பு வாய்ந்தவர். வெளிப் படையாக அவர் அமைதியுடன் இருந்தாரெனினும் அச்சம்பவத்திலிருந்து அவருடைய நரம்புகள் பெரியதோர் அதிர்ச்சிபெற்று விட்டன. சாதாரண ஓய்வும், தூய காற்றும் போதிய அளவு இருந்தால் அவருக்கு வருந் தளர்ச்சி நீங்கிவிடுவது வழக்கம். ஆனால் இம்முறை 30உ சம்பவத்திலிருந்து அவருடைய தளர்ச்சி அதிகமாகிக்கொண்டு வந்து மரணத்தில் முடிந்தது."

டாக்டர் கோபிசந்து தமது அறிக்கையில் கூறுவதாவது:— "1920ம் வருஷத்திலிருந்து நான் லாலாஜியின் தேகநிலையை மிகக் கவனமாகப் பார்த்துக்கொண்டு வருகிறேன். தூக்கமின்மையே அவருக்கிருந்த தொல்லையாகும். சிறைச்சாலையில் அவருக்கு சுவாஸாசயம் சம்பந்தமான பாரிசநோய் வந்தது. ஸோலனில் இருக்கும்போது கடுமையான வயிற்றுவலியினால் பீடிக்கப்பட்டார். தில்லியில் ஒரு ஹக்கீமினால் இது குணப்படுத்தப்பட்டது. இதனால் பெரிதும் மெலிவுற்ற அவர் ஐரோப்பாவுக்கு தேகசுக நிமித்தம் சென்றார். அசீரணம் அவருக்கிருந்தது. சில சமயம் இன்புளுயன்ஸாவும் வருவதுண்டு. எனினும், அவர் கஷ்டப்பட்டு உழைக்கச் சக்தியுள்ளவரா யிருந்தார். தளர்ச்சி யுறாமல் அவர் வேலை செய்வார். 30-ந்தேதி யன்று அடிபட்ட இடத்திலேயே லாலாஜி இறந்து விழாதது ஓர் அற்புதமேயாகும். அவர்மீது பலமான காயங்கள் பட்டிருந்தன. இக்காயங்களே அவருடைய இதயம் செயலற்றுப் போனதற்கு நேர் காரணமாகும். அன்று அடிக்கப்பட்டிரா விட்டால், லாலாஜி இன்னும் பல ஆண்டுகாலம் உயிர் வாழ்ந்திருப்பாரென்பதில் எள்ளளவும் சந்தேகமில்லை."

இதுசம்பந்தமாக, லாலாஜி சென்ற வாரம் "பீபிள்" பத்திரிகையில் எழுதிய கட்டுரையினிடையே பின் வருமாறு குறிப்பிட்டிருப்பது பெரிதும் முக்கியமுடையதாகும்:—

"அகில இந்திய காங்கரஸ் கமிட்டியில் நான் செய்த பிரசங்கம் பத்திரிகைகளில் சரியாக வெளிபடப்படவில்லை. அப்போது நான் கொஞ்சம் கிளர்ச்சியும், படபடப்பும் கொண்டவனாயிருந்தேன். லாகூரில் போலீசார் தாக்கியதனால், எனக்குண்டான காயங்கள் பிரமாதமானவை அல்லவாயினும், அதனுடைய பின்தையவிளைவுகளினால் என்உடலுக்கேற்பட்ட அதிர்ச்சியானது என் தேக சுகத்தைப் பெரிதும் பாதித்திருப்பதாக நினைக்கிறேன். நான் டில்லியிலிருந்தபோ தெல்லாம் உடம்பு சரியாகவே யில்லை. அங்கு நடந்த பொதுக் கூட்டமொன்றில் நான் பேசவேனென்று விளம்பரஞ் செய்யப்பட் டிருப்பினும் ஜுரம் வந்துவிட்டபடியினால் போக முடியவில்லை."



# லஜபதியின் வீர மரணம்

—[o]—

### அந்திய நேரம்

பாஞ்சாலச் சிங்கம் லாலா லஜபதிராய் சென்ற 17உ சனிக்கிழமை காலை 7-30 மணிக்கு இறைவனடி சேர்ந்தார். இச்செய்தி அன்று உச்சி வேளைக்குள் இந்தியாவிலுள்ள பெரிய நகரங்கள் எல்லாவற்றிற்கும் எட்டி நாட்டைத் துயரக்கடலில் ஆழ்த்தியது. அதிக நாள் நோயாய்க் கிடந்து துன்புறாமல் கடைசி நேரம் வரையில் நல்லுணர்வுடன் தாய்நாட்டுக்குத் தொண்டு செய்து கொண்டிருந்து திடீரென்று மரணமடைய வேண்டுமென்பதாக லாலாஜி அடிக்கடி கூறுவதுண்டாம். அவருடைய மனோரதம் பூரணமாய் நிறைவேறி விட்டது. அவருடைய புதல்வர் ஸ்ரீ அமிருதலால் ராய், அவருடைய பேரர் ஸ்ரீ பாரதபூஷணர், காரியதரிசி லாலா ஜகந்நாதர், குடும்ப வைத்தியர்களான டாக்டர் தர்மவீரர், டாக்டர் கோபிசந்து ஆகிய இவர்கள் கையொப்பமிட்டு வெளியிட்டுள்ள அறிக்கையில் அவர் மரணம் சம்பந்தமான விவரங்களைத் தெரிவித்துள்ளார்கள். அவ்வறிக்கை வருமாறு:—

"ஸைமன் கமிஷன் லாகூருக்கு வந்த அன்று போலீஸாரால் அடிக்கப்பட்டது முதல் லாலாஜி பலவீனமாயிருப்பதாகவும், அடிக்கடி களைப்புண்டாவதாகவும் சொல்லிவந்தார். இதயத்தில் நோய் ஏதேனும் இருப்பதாக அறிகுறிகள் காணப்படவில்லை. ஆனால் களைப்பின் அறிகுறிகள் மட்டும் அதிகமாகி வந்தன. முன்னைவிட அதிகம் பலவீன முற்றிருப்பதாக லாலாஜி உணரத் தொடங்கினார். 26உ இரவு 9-30-க்கு அவர் உடம்பு முழுதும் வலி உண்டாயிற்று. மார்பின் வலதுபுறத்தில் வலி அதிகமா யிருந்தது. டாக்டர் தர்மவீரர் அவரைப் பரிசோதனை செய்ததில், இதய வியாதி இருப்பதாகவோ, சமீபத்தில் மரணம் நேருமென்பதற்கு அறிகுறிகளோ காணப்படவில்லை. அவருடைய பழைய வியாதியான பாரிச நோய்மட்டும் காணப்பட்டது. லாலாஜி சுரம் வரும்போலிருக்கிறது என்று சொன்னார். ஆனால் வெப்பநிலை அதிகமாகவில்லை. நாடியும் சரியாயிருந்தது. மூச்சு மட்டும் வழக்கத்தை விடச் சிறிது வேகமாக வந்து கொண்டிருந்தது. கவலைக்குக் காரணம் எதுவு மில்லாதிருந்த படியால் டாக்டர் இரவு 11 மணிக்குப் போய்விட்டார். அதன் பின்னர், லாலாஜியின் பேரர் பாரத பூஷணர், வலிக்கு இதமா யிருக்கும் பொருட்டு அவர் உடம்பைப் பிடித்து விட்டுக் கொண்டிருந்தார். 1-30-க்கு லாலாஜி அவரைத் தூங்கச் செல்லும்படி சொன்னார். லாலாஜிக்கு மட்டும் நல்ல தூக்கம் இல்லை. காலை 6-30க்கு அவர் படுக்கையில் எழுந்து உட்கார்ந்து உடம்பு வலி அதிகமா யிருப்பதாகக் கூறினார். பின்னர் படுத்துக்கொண்டு திணறித் திணறி மூச்சுவிட்டார். அடுத்த அறையில் இருந்த லாலாஜியின் புதல்வரைக் கூப்பிடுவதற்காக பாரத பூஷணர் சென்றார். அவர்களிருவரும் திரும்பி வருவதற்குள் லாலாஜியின் மூச்சு நின்றுவிட்டது."

### பிரேத ஊர்வலம்

அன்று காலை 10 மணிக்குள் இந்துக்களும் முஸ்லீம்களும், சீக்கியர்களும் கிறிஸ்தவர்களும், ஆண்களும் பெண்களுமாக ஆயிரக் கணக் கானவர்கள் லாலாஜி உடலைக் கடைசி முறை தரிசிப்பதற்காக, அவர் வீட்டு வாசலில் வந்து கூடிவிட்டனர். அவ்வீதி வழியாக, வண்டிப்போக்கு வரவு நின்று விட்டது. ஏராளமான ஜனங்கள் கூடியிருந்தும் சத்தம் போடாமல் பிரேத ஊர்வலம்கிளம்பும் நேரத்தை எதிர்பார்த்து அமைதியுடன் காத்துக் கொண்டிருந்தனர். எல்லாச் சமூகங்களையும், எல்லாக் கட்சிகளையும் சேர்ந்த லாகூர் பிரமுகர்களும், நீதிபதிகள் முதலிய பெரிய உத்தியோகஸ்தர்களும் வீட்டினுள் சென்று லாலாஜியின் உடலைத் தரிசித்து விட்டு ஊர்வலத்துக்காகக் காத்திருந்தனர். லாலாஜியின் பிரேதம் நன்கு அலங்கரித்து வைக்கப்பட்டிருந்தது. அவர் உடம்பில் மூச்சு நின்ற தொன்றைத் தவிர, மரணக் குறி வேறெதுவும் காணப்படவில்லை. முகத்தில் புன்னகை தவழ்ந்து கொண்டிருந்தது. அரைத்தூக்கத்திலாழ்ந்து சிறு சத்தம் கேட்டாலும் விழித்துக் கொள்வார் போல் காணப்பட்டது. அவருடைய பிரேதத்தைத் தரிசித்தவர்களனைவரும் லாலாஜி தெய்வீக ஆனந்த நிலையில் பூரண மனச்சாந்தியுடன் காலஞ் சென்றார் என்பதை நன்கறிந்தார்கள்.

இதற்கிடையில் வெளியிடங்களிலிருந்தும் ஏராளமான ஜனங்கள் வந்து சேர்ந்தனர். அமிர்தசரஸிலிருந்து டாக்டர் கிச்லு ஸ்பெஷல் வண்டியில் ஏராளமான ஜனங்களுடன் வந்தார். டில்லி முதலிய இடங்களிலிருந்து பிரேத ஊர்வலத்தை மறுநாள் வரை நிறுத்தி வைக்க வேண்டுமென்று தந்திகள் வந்தன. ஆனால் இஃது உசிதமன்றெனக் கருதப்பட்டு மத்தியானம் 1½ மணிக்குப் பிரேத ஊர்வலம் ஆரம்பமாயிற்று. லாலாஜியின் உடலைக் குளிப்பாட்டிப் பூக்களால் அலங்கரித்து லாலா ஜெகன்னாத், டாக்டர் கோபிசந்த் முதலியோர் தூக்கிக் கொண்டனர். ஆரம்பத்தில் 25 ஆயிரம் ஜனங்களடங்கியதாயிருந்த ஊர்வலம் வழியில் லக்ஷம் ஜனங்களடங்கியதாயிற்று. ஏராளமான பெண்களும், ஆயிரக்கணக்கான மாணவர்களும் அணியணியாகச் சென்றார்கள். வேத மந்திரங்களும், பக்தி கீர்த்தனங்களும், தேசிய கீதங்களும், லாலாஜியின் வாழ்க்கையையும் தொண்டுகளையும் பற்றிய புகழ்ச்சிப் பாட்டுகளும் பாடப்பெற்றன. வழி நெடுக, இருபுறத்திலுமுள்ள வீடுகளின் முகப்புகளிலிருந்து பன்னீரும் பூக்களும் சொரியப்பட்டன. ஊர்வலம் மாலை 5-மணிக்கு ராவி நதிக்கரையைச் சேர்ந்தது. இதற்குள்ளாக லாலாஜியின் மூத்த புதல்வரான ஸ்ரீ பியாரி லால் காண் என்னுமிடத்திலிருந்து ஒரே மூச்சில் 150 மைல் மோட்டாரில் வந்து சேர்ந்தார். பின்னர், உரிய கிரியைகளுடன் உடல் தகனம் செய்யப்பட்டது.

### ஒரு சம்பவம்

மேற்படி ஊர்வலத்தின்போது வருந்தத்தக்க ஒரு சம்பவம் நேர்ந்தது. ஊர்வலத்துக் கெதிர் திசையிலிருந்து முஸ்லீம் பக்கிரி ஒருவர் மோட்டார் வண்டியில் வந்து கொண்டிருந்தார். பிரேத ஊர் வலத்துக்கு மரியாதை செய்யும் பொருட்டு அவர் வண்டியிலிருந்து கீழிறங்கினார். அவர் சி. ஐ. டி இலக்காவைச் சேர்ந்தவரென்றும், தம்மிடம் வெடி குண்டு ஒளித்து வைத்திருப்பதாகவும் கூட்டத்திலிருந்த சிலருக்கு எப்படியோ சந்தேகம் உண்டாகிவிட்டது. அவர்கள் அவரைத் துன்புறுத்தத் தொடங்கினார்கள். ஆனால் இந்து மாணாக்கர்கள் பலரும் இந்து போலீஸ் சேவகர் ஒருவரும் அவரைக் கூட்டத்தின் கையிலிருந்து தப்புவித்தார்கள். பின்னர் சில ஐரோப்பிய சார்ஜண்டுகள் வந்து அவரைப் போலீஸ் ஸ்டேஷனுக்குப் பத்திரமாய்க்கொண்டு போய்ச் சேர்த்தனர். அவரைச் சோதித்துப் பார்த்ததில் வெடி குண்டு எதுவுமகப்படவில்லை.

சாதிசமயக் கட்சி வித்தியாசம் எதுவுமின்றித்தலைவர்கள் தங்கள் துயரத்தைவெளியிட்டிருக்கின்றனர். நாடெங்கும் அநுதாபக் கூட்டங்கள், வேலை நிறுத்தங்கள்முதலியவை நிகழ்ந்தன; நிகழ்கின்றன. இந்தியத் தலைவர்கள் சிலர் வெளியிட்டுள்ள துக்கச் செய்தியைக் கீழே சுருக்கமாகத் தருகிறோம்.

### மகாத்மா காந்தி

பத்திரிகை நிருபரிடம் "இத்தருணத்தில் லாலாஜியின் மரணத்தை மகத்தான தேசிய துரதிர்ஷ்டமாக நான் கருதுகிறேன். தேசத்தில் அவர் வகித்திருந்த ஸ்தானத்தைப் பூர்த்தி செய்யவே முடியாது" என்று தெரிவித்தார். ஆமதாபாத்தில் நடந்த பொதுக் கூட்டத்தில் அடிகள் பேசியதாவது:— "நாவில் சுயராஜ்ய மந்திரத்துடன் லாலாஜி மரண மடைந்தார். ஆனால் அவர் இறக்கவில்லை யென்றும், இன்னும் உயிரோடிருக்கிறாரென்றும் நான் நம்புகிறேன். 1914-ம் ஆண்டில் நான் முதன் முதலாக லாலாஜியைச் சந்தித்தேன். அப்போதிருந்து நாங்கள் நெருங்கிய நண்பர்களா யிருந்து வந்தோம். எங்களுக்குள் கருத்து வேற்றுமை ஏற்பட்ட காலத்தும் மனக்கசப்பு தோன்றியதில்லை. ஏழைகளுக்கும் தீண்டாவகுப்பாருக்கும் லாலாஜி அரிய நண்பராக விளங்கினார். ஐம்பது ஆண்டு காலம் அவர் இரவும் பகலும் நாட்டின் விடுதலை பற்றிச் சிந்தித்து அதற்காக இடைவிடாது பாடுபட்டு வந்தார். அவருடைய அடிச்சுவட்டில் நடந்து இந்தியாவுக்கு விடுதலை தேடினாலன்றி அவருக்கு நாம் பட்டிருக்கும் நன்றிக் கடனைச் செலுத்தியவர்களாகமாட்டோம்."

நவஜீவன் பத்திரிகையில் அடிகள் எழுதியிருப்பதாவது: "இந்திய சூரிய மண்டலத்தில் ஒரு பெரிய கிரகம் மறைந்ததுபோல் லாலாஜி காலஞ் சென்றார். அவர் பஞ்சாபின் சிங்கம்; பாரதத்தாயின் வீரப் புதல்வர்; உண்மைத் தொண்டர். இந்தியாவுக்கு அவர் செய்திருக்கும் ஊழியங்களை அளவிடவே முடியாது. அவர் மரணத்தினால் விளைந்துள்ள நஷ்டத்தை ஈடு செய்யவும் முடியாது. ஆனால் ஜனங்கள் இது குறித்து அழுது புலம்புவதில் பயனில்லை. லாலாஜியின் தைரியம், தியாக புத்தி, பெருந்தன்மை, வீரம், தேசபக்தி முதலிய நறுங் குணங்களைக் கைக்கொள்ள வேண்டும். லாலாஜி சுயராஜ்யத்திற்காகவே வாழ்ந்தார். அதற்காகவே இறந்தார். எனவே அப்பேற்றிற்காக நாம் பகீரதப் பிரயத்தனஞ் செய்ய வேண்டும். லாலாஜியைப் போன்ற வீரரைப்பெற்ற நாடு பாக்கியம் செய்த நாடேயாகும்."

### டாக்டர் பேசண்டம்மையார்

நியூஇந்தியா பத்திரிகையில் எழுதுவதாவது:— "லாலா லஜபதிராயின் மரணத்தினால் தேசத்திற்கேற்பட்டுள்ள நஷ்டத்தைக் கூற வார்த்தைகள் இல்லை. லாகூரில் சைமன் கமிஷன் பகிஷ்காரத்தின்போது அவர் ஜனங்களைப் பின்னாலிருக்கச்செய்து தாம் முன்னால் சென்று பெற்றுக்கொண்ட அடிகளின் பயனாக அவர் மரணமுற்றது அவரது தீரவாழ்க்கைக்கு ஏற்ற முடிவேயாகும். வழக்கம் போல் அவருக்கும் ஓர் உருவச் சிலை நாட்டப் பெறும். ஆனால் அவருக்கு உண்மையான ஞாபகச் சின்னம் விடுதலைப்போரில் வெற்றியேயாகும். வெற்றி வரும்போது உயிர் வாழ்வோர் மட்டுந்தான் அதன் பெருமைக்குரியவராவர் என்பதற்கில்லை. தூக்கு மேடையில் உயிர்துறந்த வங்காளத்து வாலிபர்கள் என்ன, வெளி நாடுகளில் வாழும் அரவிந்தகோஷ் போன்றாரென்ன, பாரதிபோன்ற கவிஞர்களென்ன, கோகலேபோன்ற உதய நட்சத்திரங்களென்ன,—இவர்கள் எல்லாருடைய பெயரும் சுயராஜ்ய சூரியன் உதயமாகும் போது தங்க எழுத்துக்களில் பதிக்கப்பெறும். அப்பெயர்களுடன் லஜபதியின் பெயரும் பிரகாசிக்கும். அவருக்காக நாம் ஏன் துக்கிக்க வேண்டும்?"

### அக்கிராசனர் வி. ஜே. படேல்

பர்டோலி குடியானவர்களின் கூட்டமொன்றில் பேசுகையில் கூறியதாவது:— "லாலாஜியின் மரணத்துக்கும் சைமன் கமிஷன் வருகையன்று அவர் பட்ட அடிக்கும் ஏதேனும் சம்பந்த முண்டாவென வைத்தியர்களே சொல்லக்கூடும். ஆனால் இவ்விஷயமாகப் பொது விசாரணை நடத்த வேண்டுமென்று கேட்க ஜனங்களுக் குரிமையுண்டு. அப்படிக் கேட்டல் ஜனங்களின் கடமையுமாகும். அவருடைய மரணத்தினால் பஞ்சாப் கணவனை யிழந்த கைம் பெண்ணின் நிலையை யடைந்துள்ளது. இந்தியா ஒரு வீரத்தலைவரை இழந்துவிட்டது."

### வசந்தா தேவி

காலஞ் சென்ற தேசபந்து தாஸரின் மனைவியார் விடுத்துள்ள செய்தி வருமாறு:— "முப்பது கோடி தேசமக்களால் அன்புடன் போற்றப்பட்டவரும் முதுமைப் பிராயத்தவருமான லாலாஜியின் திருமேனி கீழ்மக்கள் கைகளால் அடிபட்டதை எண்ணும்போது அவமானத்தினால் என் உடம்பு நடுங்குகிறது. இந்நாட்டில் இன்னும் ஆண்மை யிருக்கின்றதா? இங்கே இளைஞர்கள் வாழ்கிறார்களா? இந்தக் கொடிய அவமானத்தை அவர்கள் உணருகிறார்களா? இவ்வினாவுக்குப் பெண்பாலாகிய நான் தெளிவான விடை வேண்டுகிறேன். நமதருமை லாலாஜி உடலின் சாம்பல் குளிர்வதற்கு முன்னால் இந்தியாவின் இளைஞர்களும் ஆண் மக்களும் எனக்கு விடை தரவேண்டும்."

### பண்டித நேரு

பத்திரிகை நிருபரிடம் கூறியதாவது:— "லாலாஜி ஒரு மகா புருஷர்; உத்தமர்; உண்மையாளர். நமது போராட்டத்தில் நெருக்கடியான நிலையில் லாலாஜி திடீரென்று இறந்துவிட்டார். எனக்கு ஓர் அருந்தோழரின் விலை மதிக்கொணாத உதவி இல்லாமல் போயிற்று. சுயநலம் அறவேயற்ற ஒரு தேசபக்தரின் உண்மைத் தொண்டை தேசம் இழந்தது."

### சுபாஷ் சந்திரபோஸ்

பின் வருமாறு தெரிவித்துள்ளார்:— "உள்ளம் துக்கத்தினால் நிரம்பியிருக்கும் போது அதிகமாய்ப் பேசுவதற்கு முடியாது. ஆயினும் சைமன் கமிஷன் லாகூருக்கு வந்த போது லாலாஜி கடைசியாக நாட்டுக்குச் செய்த தொண்டை நினைக்குங்கால் மகிழ்ச்சியும் பெருமையும் உண்டாகின்றன. அவர் நம்மைவிட்டுப் போவதற்கு முன்னால் தம் சொத்துக்கள் எல்லாவற்றையும் நாட்டுக்கு நன்கொடையாக அளித்துள்ளார். தேசபந்துவும் இவ்வாறே செய்தார். மகா புருஷர்கள் உயிர் வாழ்வதும் மரணமடைவதும் இப்படித்தான்."

### ஸ்ரீ ஜம்னாதாஸ் மேதா

பம்பாயில் நடந்த ஒரு பொதுக்கூட்டத்தில் பேசுகையில் கூறியதாவது:—"போலீஸ் அதிகாரிகள் கோழைத்தனமாகத் தாக்கி அடித்ததினாலேயே லாலாஜி காலஞ்சென்றாரென்பது உண்மையாயின், இந்தியாவின் மாபெருந் தேசியத் தலைவரைப் பாஞ்சால அரசாங்கத்தார் கொலை செய்து விட்டார்களென்றே கூறுவேன். அவருடைய இரத்தத்தில் ஒவ்வொரு சொட்டும் பழி வாங்கும்படி கேட்கும். சைமன் கமிஷன் இந்தியாவின் சாபத்துடன் திரும்பிச் செல்லும்."

### அரசினர் துயரம்

லாலாஜியின் மரணத்தை முன்னிட்டு லாகூர் ஹைகோர்ட்டு மூடப்பட்டது. அரசாங்கக் கல்லூரிகளும், சட்ட கலாசாலைகளுங் கூட மூடப்பட்டன. அரசாங்கக் கல்லூரியில் பறந்த யூனியன் ஜாக் கொடி இத்துக்க சம்பவத்தை முன்னிட்டுத் தாழ்த்தப்பட்டதாம். இராஜப் பிரதிநிதி இர்வினும், உள்நாட்டு அங்கத்தவர் கனம் கிரிராரும் கூட லஜபதியின் புதல்வருக்கு அநுதாபச் செய்தி அனுப்பியிருக்கிறார்கள். லார்ட் இர்வின் "உங்களுடைய தந்தையார் திடீரென்று அகாலமரண மெய்திய செய்தியறிந்து பெரிதும் திடுக்கிட்டேன். உங்களுக்கும் உங்கள் குடும்பத்துக்கும் மனமார்ந்த அநுதாபம் தெரிவித்துக் கொள்கிறேன்." என்று குறிப்பிட்டுள்ளார். ஸைமன் கமிஷன் தலைவர் சர் ஜான் சைமனும் இங்கிலாந்தின் தொழிற்கட்சித் தலைவர்கள் மிஸ்டர் ராம்சே மக்டொனல்டு, கர்னல் வெட்ஜ்வுட் முதலியவர்களும் தங்கள் துக்கத்தை வெளியிட்டிருக்கிறார்கள்.

### இன்னும் சில அபிப்பிராயங்கள்

ஸர் அப்துல் குவாதிர்:— லாலாஜி எவ்வித உடல் வேதனையும் அநுபவியாமல், கடைசி நிமிஷம் வரையில் தேசத் தொண்டில் ஈடுபட்டிருந்து மாண்டார். அவர் மரணம் பொறாமைப்படுதற்குரிய மரணமாகும்.

டாக்டர் ஷாஃபத்தி:— லாகூரில் நிகழ்ந்த வருந்தத்தக்க சம்பவங்களுக்குப் பின்னர் மரணம் நேர்ந்தது நமது துன்பத்தை அதிகமாக்குகிறது. ஆனால் அதுவே "தாய்நாட்டுக்காக உயிர்துறந்த ஆத்மத்தியாகி" என்னும் பெருமையை அவருக்களிக்கிறது.

டாக்டர் முகமது ஆலம்:— மனிதன் எப்படி உயிர் வாழவேண்டும்; எப்படி உயிர்விட வேண்டுமென்பதை லாலாஜி காட்டிவிட்டார். அவரைப் போன்ற வீர மரணம் அடைய நாமெல்லாரும் தவம் செய்ய வேண்டும்.

ஜனாப் ஸாபர் அலி கான்:— 30உ லாலாஜி பட்ட அடிகள் அவர் மரணத்தைத் துரிதப்படுத்தின. லாலாஜி சொன்னது போல் அவ்வடிகள் பிரிட்டிஷ் ஏகாதிபத்தியச் சவப்பெட்டியின் மீது அடிக்கப்பட்ட ஆணிகளே யாகும்.

ஸர்தார் மங்களசிங்:—சுதந்திரக் குடியாசு ஒன்றில் அக்கிராசனரா யிருக்கக்கூடிய மனிதர் சாதாரண போலீஸ்காரன் ஒருவனால் தடி கொண்டு அடிக்கப்பட்டார். அதற்கு இன்னும் நியாயம் பிறக்கவில்லை.

ஷேக் ஸிராஜுடீன்:—ஐலியன் வாலா பாக் சுதந்திரத்தின் விதை விதைத்தது. லஜபதிராயின் ஆத்மத் தியாகம் சுயராஜ்யப் பேற்றை அருகில் கொண்டு வந்துவிட்டதென்பதில் ஐயமில்லை.

### சாவிலும் தலைவர்

ஸ்ரீமான் ஸாஹானி:—லாலாஜி தமது இரத்தத்தினால் சைமன் கமிஷனை வரவேற்றார். சுயமரியாதையுள்ள தேசத்தார் இத்தகைய் கமிஷனை அப்படித்தான் வரவேற்பார்கள். லாலாஜி தமது ஆயுள் காலத்தில் பல நூற்றாண்டுகளின் வேலை செய்திருக்கிறார்.

ஜனாப் ஆஸப் அலி:—அதிகாரவர்க்கத்தின் ஏஜண்டுகள் லாலாஜியின் இதயத்துக் கருகில் அடித்தார்கள். லாலாஜியின் மரணத்துக்கு அதிகாரவர்க்கமே பெரிதும் பொறுப்புடையது.

தேசபந்து குப்தா:— லாலாஜி வாழ்விலும் தலைவர்; சாவிலும் தலைவர். மரணத்தைத் தீரத்துடன் எதிர்த்து அவர் மக்களுக்கு வழிகாட்டியுள்ளார்.

ஆசிரியர் இந்திரர்:— ஸர் ஜான் சைமனிடமிருந்து கிடைத்துள்ள முதல் தவணை சுயராஜ்யம் லாலாஜியின் மரணமாகும். இன்னும் இது போன்ற சுயராஜ்யத் தவணைகள் வேண்டுமானால் ஜனங்கள் அவரிடம் போகட்டும்.

ஸ்ரீமான் நாரிமன்:—இந்நாடு சுதந்திரம் பெறுத வரையில் லாலாஜியின் ஆன்மா சாந்தமடையாது. வேறு தகவல் கிடைக்கும் வரை, ஒரு பொறுப்புள்ள உத்தியோகஸ்தர் கோழைத்தனமாயும் குரூரமாயும் தாக்கியதின் பயனாகவே அவர் இறந்தார் என்று நீங்கள் எண்ணுதல் சரியாகும்.

### லஜபதி நாள்

நவம்பர்மீ 29உயன்று லாலா லஜபதிராய் தினமாகக் கொண்டாட வேண்டுமென்று டாக்டர் அன்சாரியும், மௌலானா அபுல் கலாம் ஆஸாத்தும் தேசத்திற்கு வேண்டுகோள் விடுத்திருக்கின்றனர்.

## சிங்காரப் பூங்காவனம்

(தொடர்ச்சி)

உலகம் புரிந்த பாக்கியமே இராமனாக வருகிறதென்று கருதும் கம்பர், உலகின் சாராம்ச மாகிய வளமும் வனப்பும் ('புவிமடந்தைத் திரு') சீதையாக விளைகின்றனவென மகிழ்கின்றார். ஒரே வார்த்தையில் கூறுமிடத்து, காவிய நாயகன் 'கவியமை கீர்த்தியக்காளை' என்றவாறு கம்பர் வீரகாவியத்தில் அமையத்தக்க பெருமை வாய்ந்த வீர புருஷனாக விளங்குகின்றானெனின், கம்பரது 'செஞ் சொற்கவியின்ப'மே காவிய நாயகியாக உருவெடுத்து வருகின்றதெனக் கருதல் வேண்டும்.

* * *

### ஞானப் பூங்கோயிலும் சிங்காரப் பூங்காவனமும்

அறத்தின் மூர்த்தியாகிய காவிய நாயகனது அறப் பெருங்கோயில் கோசல நாட்டின் தலை நகரான அயோத்திமா நகரமெனின், அப்பெருமானது 'உள்ளுறை உயி'ராகிய காதலியின் திருக்கோயில், ஜனகக் குல நகரமான மிதிலை நகரம். இந்நகரம் (பத்தாவது) மிதிலைக் காட்சிப் படலத்தில் வருணிக்கப்படுகின்றது.

"திங்களும் கரிதென வெண்மை தீர்ந்திய
சங்கவெண் சுதையுடைத் தவள மாளிகை
வெங்கதிர் கால் பொர மேக்கு நோக்கிய
பொங்கிரும் பாற்கடல் தரங்கம்போலுமே"

என்று (நகரப்படலத்தில்) வருணிக்கப்பெறும் அயோத்திமா நகரம் புறத்தோற்றத்தாலும் அகத் தோற்றத்தாலும் அறிவுத் தெய்வத்திற்குரிய வெண்டாமரை மலரெனத் தோன்றுகின்றதெனின், மிதிலைமா நகரம் "சீதையைத் தருதலாலே, திருமகளிருந்த செய்ய-போ தெனப் பொலிந்து தோன்றும் பொன்மதில் மிதிலை" என்றவாறு அழகுத் தெய்வம் குடி கொள்ளும் செந்தாமரை யென ஒளிதோற்றி மலர்கின்றது. அயோத்தி அறப்பெருங் கோயிலாகவும் பேரறிவுப் பண்டசாலையாகவும் நிர்மாணஞ் செய்யப் பெறுகின்றதெனின், மிதிலை, அறப்பெருஞ் செல்வமாகிய இராமனும் மாசற்றல விளக்காகிய சீதையும் ஒருவரையொருவர் சந்தித்துக் காதலிப்பதற்கேற்றதொரு சிங்காரப் பூங்காவனமாகச் சிங்காரிக்கப் படுகின்றது.

* * *

### காதற் சோலை

"மையறு மலரி னீங்கி
யான்செய் மாதவத்தின் வந்து
செய்யவள் இருந்தா ளென்று
செழுமணிக் கொடிக ளென்னும்
கைகளை நீட்டியந்தக் கடிநகர்
கமலச் செங்கண்
ஐயனை ஒல்லைவா என்று
அழைப்பது போன்ற தம்மா"

என்று மிதிலைக் காட்சி தொடங்குகின்றது. 'தருமமே தூக செல்ல - வரம்பில் பேரழகினாளை மணஞ் செய்வான் வருகின்' ற அறத்தின் நாயகனை வா வென் றழைப்பது போலவும், நடை பெறப் போகும் காதல் மணத்தை வியந்து வாழ்த்திச் செயல் மறந்து ஆடுவ போலவும் மணிக்கொடிகளெல்லாம் காற்றில் அசைந்தாடுகின்றன. மிதிலையின் அலங்காரமான மாட நெடு வீதிகளில், மட்டுப் படாது பொங்கும் காதற் செல்வத்தின் அறிகுறிகள் பல காணப்படுகின்றன. அரங்கேறி நாடக மாதர் 'கைவழி நயனஞ் செல்லக் கண்வழி மனமும் செல்ல' நடம் புரிகின்றார். பவளச் செங்காய் மரகதக் கமுகு பூண்ட ஊசலின் மீது பெண்கள் இனிதிவர்ந்து காதலர் சிந்தையோடு விசையாட்டம் ஆடுகின்றார். இக்காட்சிகளும் பிறவும் மிதிலையை ஒரு காதற் சோலையாகக் காட்டுகின்றன. இத்தகைய பல விநோதங் கண்டு வியந்து சென்ற இராமனாதியோர் அரசனது அரண்மனையின் மதிற்புறத்துற்று,

"பா கொக்கும் சொற் பைங்கிளியோடும்
பல பேசி
மாகத்தும்பர் மங்கையர் நாண
மலர் கொய்யும்
தோகைக் கொம்பின் அன்னவர்க்கன்னம்
நடைதோற்றுப்
போகச் சண்டு வண்டினம் ஆர்க்கும்
பொழில் கண்டார்"

என்ன வாழ்க்கை! என்ன ஆனந்த சதந்திரம்! மிதிலைப் பெண்கள் கூட்டிலடைத்த கிளிகளைப் போல் வாழாது, பஞ்சரத்தி னின்றும் விடுதலை பெற்ற மோகனப் பைங் கிளிகள் போல் திரிந்து பறந்து வாழ்கின்றார் என்பது கவனிக்கத் தக்கது.

## கம்பரைக் கற்கும் முறை

(பி. ஸ்ரீ)

### காதலர் காட்சி

பூம்பொழிலின் அருகே 'மின் சேவிப்ப மின்னாசென்னும்படி' பாக்கியர் குழச் சீதை கன்னிமாடத்தில் நின்று ஒரு துறையில் பெண் அன்னத்தோடு ஆண் அன்னம் விளையாடுவதைப் பார்த்துக் கொண்டிருந்தாள்.

"பொன்னின் சோதி, போதினில் நாற்றம்
பொலிவே போல்
தென்னுண் தேனில் தீஞ்சுவை, செஞ்
கவி யின்பம் [சொற்
கன்னிம் மாடத் தும்பரின் மாடே
கழிபே டோ(டு)
அன்னம் ஆடும் முன்துறை கண்டங்
கயல் நின்றாள்."

அப்போது சீதையின் கண்களும் இராமன் கண்களும் சந்தித்தன. 'கல்லும் புல்லும் கண்டுருக' நின்ற 'பெண்கனி' தன் 'ஆசையின் கனி' யைச் சந்திக்கின்றாள். இராமனும் காதலியைக் கண்ணில் நோக்கிக் களிக்கின்றான். இக்காட்சி இராமனது உள்ளத்தில் என்றும் வாடாத தனிப் பெருஞ் சித்திரமாக ஆழ்ந்து பதிகின்ற தென்பது,

"அன்னம் ஆடுந் துறைக்
கருகு நின்றாளைக்
கன்னி மாடத்திடைக்
கண்டதும் கழறுவாய்"

என்று இராமன் அநுமனை நோக்கிக் கூறும் அடையாள வார்த்தையால் இனிது புலனாகும்.

* * *

'அண்ணலும் நோக்கினன், அவளும் நோக்கினள்' என்ற அற்புத வாக்கு, காதல் மணம் கமழும் கம்பச் சித்திரத்தைச் சித்திரிப்பதோடு, காதற் சோலையாகிய மிதிலையில் பெண் மக்களுக்கு உரியதாக விருந்த வீர சுதந்திரத் தினையும் வெளி யிடுகின்றது. (மிதிலை வாசிகள் சிறைக்காவலை நம்பினாரில்லை; நிறைக் காவலையே நம்பி வாழ்கின்றார் என்பது கவனிக்கத் தக்கது.) இத்தகைய காதலர் காட்சிக் கிசையவே மிதிலைக் காட்சிப் படலம் சிங்காரிக்கப் பெறுகின்றது. இராமன் முதலியோர் சீதை கண்ணுக்குப் புலப்படாது மறைந்த போனபின், கதிரவன் மறைவதும், செக்கர் வானம் மாலைப் பொழுது இருட்காலம் திங்களெழுச்சி முதலியவற்றால் காதலர் இருவரும் காதல் நோய் கைம் மிகப் பெற்று வருந்துவதும் வருணிக்கப்படுகின்றன. மிதிலைக் காட்சிப் படலத்தில் சிங்காரிக்கப் பெறும் காதலர் காட்சி, கடிமணப் படலத்தில் குறிக்கப்படும் காணத்திற்கு இன்றியமையாத பூர்வாங்கமாகின்றது.

* * *

### காதலின் வெற்றி

'விருந்தினர்கள் நின்னுடைய வேள்வி காணிய வந்தார், வில்லும் காண்பார்' என்று மிதிலைக் காட்சிப்படலம் முற்றுப் பெறுவது கார் முகப் படலத்தில் இராமன் வில்லிறுத்து வெற்றி பெறுவதற்கு ஏற்ற தோற்று வாயாகின்றது. இவ்விரண்டு படலங்களுக்கு மிடையே யுள்ள குல முறை கிளத்து படலம் காதலனது வரலாறும் புயவலியும் இவை யென்று கம்பீரமாகக் கட்டியங் கூறி முழக்குகின்றது.

* * *

இனிக் கார்முகப்படலத்தை ஆராய்வோம். இராமன் வில்லிறுத்துச் சீதையை மணந்தான் என்பது வான் மீக ராமாயணம். இராமன் சீதையைக் கண்டு வில்லிறுத்தான் என்பது கம்ப ராமாயணம். நேயர்களே! இவ்விரண்டு சித்திரங்களையும் உற்று நோக்குங்கள். அசுர மணத்திற்கும் கந்தர்வ மணத்திற்கும் உள்ள வேறுபாடு காண்பீர்கள். பண்டைத் தமிழரின் பழக்க ஒழுக்கங்கட்கு இசைய நம் கவிநாதன் கதைப் போக்கினையும் காவியப் போக்கினையும் மாற்றி யமைத்துள்ளார் என்பதற்கு இம்மாறுதல் ஒரு பெருஞ் சான்றாகுமன்றோ?

* * *

இப்படலத்தின் முதற் கண் சதானந்த முனிவரன் வில்லின் வலாற்றினையும் சீதையின் வரலாற்றினையும் கூறுகின்றான். இம் முனிவன் சொன்னதை யுன்னி, அறிவனாகிய விசுவாமித்திரன் இராமனைப் பார்த்தான்; இராமன் வில்லைப் பார்த் தெழுந்தான். இராமனையும் வில்லையும் பார்த்து மாதர்கள் பலவாறு பேச, வீரன் 'பொழிந்த நெய் ஆகுதிவாய் வழி பொங்கி—எழுந்த கொழுங்கனலென்ன எழுந்து சென்று,

"ஆடகமால்வரை யன்னது தன்னைத்
தேடரு மாமணி சீதையெனும் பொற்
சூடக வால்வளை சூட்டிட நீட்டும்
ஏடவிழ் மாலையிதென்ன எடுத்தான்"

மகாமேருமலை போல் பயங்கரமாகக் காணப்பட்ட பெருவில், காதலன் கண்களில் அவ்வாறு காணப்படவில்லை; காதலிக்குச் சூட்டும் மலர் மாலையாகக் காணப்படுகின்றது. சீதையின் காதலே இராமன் அநாயாசமாக வில்லிறுத்து வெற்றி பெறுவதற்குக் காரணமாகு மென்பது இங்குக் கம்பர் குறிப்பு. இஃது கோலங்காண் படலத்திலுள்ள

"அச்சென நினைத்தமுதல்
அந்தணனிருந்தான்
பச்சைமலை யொத்தபடி
வத்தடலி ராமன்
நச்சுடை வடிக்கண் மலர்
நங்கை இவளென்றால்
இச்சிலை கிடக்கமலை
ஏழையும் இறாதோ?"

என்ற செய்யுளாலும் அரண் செய்யப் பெறுகின்றது. காதலன் வில்லிறுத்து வெற்றி சூடியதற்குக் காதலி கண்ணாற் பணித்த பணி முக்கிய காரணமாவது போலவே, பரசுராமனை வென்று தவவலியழிப்பதற்கும் அஃது ஒரு காரணம் ஆகலாம் என்று ஊகித்தல் தவறாகாது. கம்பராமாயணம் முழுதுமே இராமனது வீரத்தோளின் வெற்றியாக மட்டும் அமையாது, காதலின் வெற்றியாகவும் அமைகின்றது. எனவே சீதாராமரின் காதலை வருணிப்பது கம்பர் கவிச்சித்திரத்திற்கு இன்றியமையாததாகும்.

* * *

### 'கண்வழி புகுந்த காதல்'

"கண்ணொடு கண்ணிணை நோக்கொக்கின்
வாய்ச்சொற்கள் என்ன பயனும் இல"

என்னும் தமிழ்ப் பொதுமறை,

"கண்ணொடு கண்ணிணை கவ்வி ஒன்றை
[யொன்று
உண்ணவும் நிலைபெறா துணர்வும் ஒன்றிட
அண்ணலும் நோக்கினன் அவளும் நோக்
[கினள்"

என்னும் கம்பசித்திரத்தில் புதிய ஒளியும் திறமும் பெறுகின்றது. மிதிலைக் காட்சிப் படலத்தின் உயிர் நிலையாக அமைந்துள்ள காதலர் காட்சியினைக் கோலங் காண் படத்திலுள்ள,

"கருங்கடை நெடுங்கண் ஒளி
யாறு நிறை கண்ணப்
பெருங்கடலின் மண்டஉயிர்
பெற்றினி துயிர்க்கும்
அருங்கலன் அணங்கரசி
ஆரமிழ்த னைத்தும்
ஒருங்குடன அருந்தினரை
ஒத்துடல் தடித்தான்"

என்னும் சித்திரம் மீண்டும் வலியுறுத்துவதாகும். கண்வழி புகுந்த காதலால், காதலர் புத்துயிர் பெறுகின்றாரென்பது இங்குக் குறிப்பு.

இப்புது நிலையின் தன்மை
"பருகிய நோக்கெனும்
பாசத்தால் பிணித்(து)
ஒருவரை ஒருவர் தம்
உள்ளம் ஈர்த்தலால்,
வரிசிலை யண்ணலும்
வாட்கண் நங்கையும்
இருவரும் மாறிப்புக்
கிதயம் எய்தினர்"

என்ற செய்யுளில் ஒருவாறு வெளியிடப் பெறுகின்றது. காதல் நோக்கின் வசீகர சக்தியால் இராமன் சீதையின் உள்ளத்தே பிரவேசிக்கின்றான. சீதையும் இராமன் உள்ளத்தே பிரவேசிக்கின்றாள். இனி இராமன் சீதைக்காகவே வாழ்கின்றான்; சீதை இராமனுக்காகவே வாழ்கின்றாள். இவ்வனம் சீதாராமரது காதல் வாழ்க்கை காதலின் தெய்விக சக்தியால் தந்நலம் அறந்த தூய வாழ்க்கையாகத் தொடங்குகின்றது. சீதையின் காதல் வெள்ளம் உடன் தானே தியாக உணர்வாகப் பொங்குகின்றது.

* * *

வில்லிறுத்த செய்தியறிந்த ஒரு பாங்கி சென்று காதலால் வசீகரிக்கப் பெற்றிருந்த சீதைக்கு உரைக்க, அதுகேட்ட சீதை

"சொல்லிய குறியின்
அத்தோன்றலே அவன்
அல்லனேல் இறப்பெனன்
றகத்துள் உன்னினள்"

—(கார்முகப்படலம்.)

"வெள்ளத்தின் சடிலத்தான்தன்
வெஞ்சிலை இறுத்தவீரன்
தள்ளத்தன் ஆவி சோரத்
தனிப்பெரும் பெண்மை தன்னை
அள்ளிக்கொண் டகன்ற காளை
அல்லன்கொல்? ஆங்கொல் என்பாள்
உள்ளத்தின் ஊசலாடும்
குழைநிழல் உமிழ விட்டார்"

என்ற (கோலங்காண் படல) வருணனைக் கவியும் சீதையின் காதல் உள்ளத்தினை நினைப்பூட்டுகின்றது. இக்கருத்து, கிஷ்கிந்தா காண்டத்தில் இராமன் அநுமன் வாயிலாகச் சீதைக்குச் சொல்லி யனுப்பும் ஓர் அடையாள வார்த்தையாகவும் வலியுறுத்தப் பெறுகிறது. கம்பர் சந்தர்ப்பம் நோக்கி வெளியிட்டுள்ள இக்குறிப்புக்கள், அவர் வான்மீகத்தினின்று மாறுபட்டுச் சித்திரிக்கும் காதற்றிருமணத்துக்கு வாசகர்கள் கவனத்தை ஈர்க்கின்றன.

* * *

இங்ஙனம் மிதிலைக் காட்சிப் படலம் குல முறை கிளத்து படலம் கார்முகப் படலம் கோலங்காண் படலம் ஆகிய முக்கியமான பகுதிகள் ஒன்றோடொன்று பின்னிப் பிணைந்த பொற்சரடுபோல் அமைந்து கடிமணப்படலத்தைத் தழுவி நிற்கின்றன. இனி, எழுச்சிப் படலம் முதல் உலாவியற் படலம் ஈறாக உள்ள பகுதி இத்தகைய கம்பசித்திரத்தில் எவ்வாறு இடம் பெறுகின்றதென்பதையும் கவனிப்போம்.

* * *

### சித்திரசாலையும் சிங்கார வனமும்

இராமன் வில்லிறுத்தபின், பேருவகை எய்திய ஜனகமன்னன் விசுவாமித்திர முனிவனை நோக்கி, "எம்பெரும! உன் புதல்வன் திருமணம் விரைவில் இன்றொரு பகலிலேயே முடித்தல் விருப்பமோ? அவ்வரசையும் இங்கு அழைத்தல் வேட்கையோ" என்று ஆத்திரத்தோடு வினவுகின்றான். விசுவாமித்திரன் அவனையும் வருவித்து மணஞ் செய்வதே நன்றென, ஜனகன் இங்கு நடந்தவைகளைச் சொலுக வென்று தசரத மன்னனுக்குத் தூதும் திருமுகமும் அனுப்புகின்றான். இந்நிகழ்ச்சி கார்முகப்படலத்தின் இறுவாயாக அமைந்து, அடுத்துவரும் எழுச்சிப்படலம் முதல் எதிர்கோட்படலம் ஈறாகவுள்ள ஆறு படலங்களுக்கும் தோற்றுவாயாகின்றது. இவ் ஆறு படலங்களாலும், தூதுவர் மூலம் திருமண நிகழ்வு தெரிந்த சக்கரவர்த்தி, தேவியரும் மந்திரச் சுற்றமும் சேனை மூகமும் நகர மாந்தரும் தற்சூழ்ந்துவர மிதிலைக்குச் செல்ல வழிக் கொண்டமையும், செல்லும் நெறியிடை அவன் தங்கிச் சென்ற இடங்களில் நிகழ்ந்த மலைக் காட்சி பொழில் விளையாட்டு முதலியனவும், சக்கரவர்த்தியை ஜனகன் ஆதியோர் எதிர்கொண்டழைத்தமையும் கூறப்பட்டுள்ளன. மணமகன் மிதிலையின் இராஜ வீதி முதலியவற்றில் பிரவேசித்துப் பேதை முதல் பேரிளம் பெண் ஈறாகவுள்ள எழுவகைப் பருவ மாதரும் நெருங்கித் தற்சூழ்ந்து மகிழுமாறு உலா வந்த தன்மை உலாவியற் படலத்தில் சித்திரிக்கப் படுகின்றது. இப்படலம்.

"கண்ணினால் காதல் என்னும்
பொருளையே காண்கின்றோம் இப்
பெண்ணி னீர்மையினால் எய்தும்
பயன் இன்று பெறுதுமென்பார்"

என்றவாறு காதலே பெண்மையின் பொருளும் பயனுமாகும் என்று கருதும் மிதிலைப் பெண்களை இனிமையும் எழிலும் தோன்ற எழுதிக் காட்டுமோர் அரிய சித்திரசாலையாக அமைகின்றது. (அயோத்தி மாதர் அருங்கலை விநோதராகக் காண்கின்றார் என்பது கவனிக்கத் தக்கது.) உலாவியற் படலம் பின் வரும் கோலங் காண்படலம் கடிமணப் படலம் என்பவற்றுக்கு இன்றியமையாத பிரவேசமாகின்றது. இவ்வாறு மிதிலைக் காட்சிப் படலம் முதல் கடிமணப் படலம், ஈறாகவுள்ள படலங்கள் ஒன்றோடொன்று பொருந்தி யமைந்து சீதா ராமரின் காதல் மணத்திற்கு ஏற்றதொரு சிங்காரப் பூங்காவனமாகத் திகழ்கின்றன.

* * *

பால காண்டத்தின் முதல் நான்கு படலங்களும் திருவவதாரப் படலத்தை அரண் செய்கின்றன. அவ்வண்ணமே பத்தாவது மிதிலைக் காட்சி தொடக்கமான பதினொரு படலங்களும் கடிமணப் படலத்துக்கு அணியென்வா அமைந்துள்ளன. பால காண்டத்தின் பெரும் பகுதியான இப்பதினைந்து படலங்களும் அக்காண்டத்தின் இரு பெரு நிகழ்ச்சிகளான திருவவதாரம் திருமணம் என்பவற்றைத் தழுவியமைகின்றனவென்பதை ஆராய்ந்தோம்.

* * *

இனி, இக்காண்டத்தின் இறுதியிலுள்ளதாகிய பரசுராமப் படலம் இம் மூன்றிற் சோலையினகத்து எவ்வாறு பொருந்தி யமைகின்றதென்பதையும் கவனிப்போம்.

(தொடரும்)



## முறையீடு

திரு. பி. ஸ்ரீநிவாஸாசாரியார் அவர்களின் ஆராய்ச்சி

ஓவியப் புலவன் ஒரு கிழியில் இயற்கைக் காட்சியைப் பல நிறங்களால் அழகு பெறத் தீட்டிக் காண்பார் கண்களையும் உள்ளத்தையும் உவக்கச் செய்வது போலவும், பொன் வினைப் புலவன் பொன்னை யுருக்கியடித்து அணிகலனுக்கி நவமணியிழைத்து அணிவார்க் கழகு பெறச் செய்து அவர்களை மகிழ்வித்தல் போலவும், மடைத் தொழிற் புலவன் பண்டங்களை மிகாமற் குறையாமற் கலந்து அறுசுவை யுண்டியாக்கி உண்பார் நாவிற் கின்பச் சுவையூட்டிக் களிப்பித்தல் போலவும், இன்னிசைப் புலவன் எழுவகை யொலியையும் காலத்திற்கும் இடத்திற்கும் தக்கவாறு ஏற்றியும் இறக்கியும் ஒலித்துக் கேட்பார் செவிப்புலனுக் கின்பச் சுவையூட்டி மகிழ்வித்தல் போலவும், பொருள்களை அணிபெற வமைத்து இனிய சொற்களாற் சுவை பெறப்பாடும் வாணருட் சிறந்த கம்பர் இராகவன் வாழ்க்கையாகிய காட்சியை இராமாயணக் கிழியில் அவ்வவ்விடங்களுக் கேற்ற வண்ணங்களுடன் தமதினிய சொற் கோவையால் அணிபெறத் தீட்டிய பாட்டோவியத்தின் சுவையைத் தமிழுலகத்திற் கெடுத்து விளக்கிக் காட்ட முன்வந்த பிரம்மஸ்ரீ பி. ஸ்ரீநிவாஸாசாரியார் அவர்களின் ஆராய்ச்சி பெரிதும் பாராட்டற் பாலது. அவ்வறிஞர் ஆயுளுந் திருவும் போகமும் பொலிவு மெய்தி இனிது வாழ இறைவனை வணங்குகிறேன்.

கா. சி. சிவசங்கர முதலியார்.

### எக்காலக் கண்ணி

வயிறாரச் சோறுண்டு
மக்களெலா மகிழ்வெய்த
பயிர்த் தொழிலே யுயிர்த் தொழிலாய்ப்
பரவுவது மெக்காலம். (க)

பொய்க்கல்வி யெல்லாம்
புறங்காட்டப் புண்ணியமாம்
மெய்க்கல்வி யோங்கி
வெளிப்படுவ தெக்காலம். (உ)

செத்துப் பிறக்கின்ற
சீவரெலாம் இன்பமுற
சித்தர்களைக் கண்டு
தரிசிப்ப தெக்காலம். (ங)

செய்யுந் தொழிலெல்லாஞ்
சீர்தூக்கிப் பார்த்துலகோர்
நெய்யுந் தொழிலை
நிலைப்பிப்ப தெக்காலம். (ச)

மிறவினையை நீக்கியுள
மக்களெலா மெஞ்ஞான்றும்
அறவினையை மேற்கொண்
டகமகிழ்வ தெக்காலம். (ரு)

சோற்றை நிரப்பிச்
சுடுகாட்டுக் கேகாமல்
காற்றை நிரப்பிக்
களிப்பதுவும் எக்காலம். (சு)

அடிமைப் படிப்பை
யகற்றிவிட்டு நாடோறும்
குடிமைப் படிப்பைக்
குறிக்கொள்வ தெக்காலம். (எ)

பணத்தாசை கொண்டு
பதறித் தவிக்காமல்
குணத்தாசை கொண்டு மக்கள்
கூடுவது மெக்காலம். (அ)

சண்டையெலாம் நீங்கிச்
சமயக் கணக்கரெலாம்
பண்டை முறைபோல்
பயிலுவது மெக்காலம். (கூ)

பொய்வாதஞ் செய்து
புவியோரை வஞ்சிப்போர்
மெய்வாதஞ் செய்து
மிளிர்வதுவு மெக்காலம். (கய)

கா. சி. சிவசங்கர முதலியார்.

சென்ற வாரம் சூரிய கிரகணத் தன்று சென்னைப் போஸ்டுமாஸ்டர் ஜெனரல் காரியாலயக் கணக்காளராகிய ஸ்ரீமான் என். ஆர். கிருஷ்ணமாச்சாரியார் கடலில் ஸ்நானம் செய்து கொண்டிருந்தபோது திடீரென்று அவர் ஓர் அலையினால் அடித்துக்கொண்டு போகப்பட்டு உயிர் துறந்தார்.

## எதிரொலி

### யுத்த நிறுத்தக் கொண்டாட்டம்

சென்ற பத்தாண்டுகளில் போலவே இவ்வாண்டிலும் இந்தப் பதினோராம் மாதம், பதினோராம் தேதி, பதினோராவது மணியில் பிரிட்டிஷ் ஏகாதிபத்திய மெங்கும் இரண்டு நிமிஷ மௌன விரதம் அநுசரிக்கப்படும். 1918 ம் ஆண்டில் இந்தப் புண்ணிய தினத்தில் மகாயுத்தம் முடிவடைந்தது. அச் சம்பவத்தின் ஞாபகார்த்தமாக இந்த இரண்டு நிமிஷ மௌனம் அனுஷ்டிக்கப் படுகிறது. இந்தியாவின் உத்தியோக வர்க்கத்தாரும் இம்மௌன விரதம் கொண்டாடுகிறார்கள். அதீத இராஜபக்தியுள்ள இந்தியர் சிலரும் இதில் கலந்து கொள்கின்றனர். இவர்களெல்லாம் இது செய்வதற்குக் காரணம் உண்டு. ஆனால் சாது இந்தியர் சிலரும் இந்தக் கேலிக் கூத்தில் கலந்து கொள்வது தான் வருந்தத்தக்கதாகும். நாம் எதற்காக இத் தினத்தைக் கொண்டாட வேண்டும்? இங்கிலாந்து இத் தினத்தைக் கொண்டாடுவதில் பொருளுண்டு. இங்கிலாந்து தன் வாழ்வுக்கே வந்த பேரபாயம் நீங்கிப் பகையை வெற்றி கொண்டதற்கும், உலக அரசியலில் பிரிட்டிஷ் ஆதிக்கம் உறுதி பெற்றதற்கும், பிரிட்டிஷ் சாம்ராஜ்யம் இன்னும் விசாலித்துப் புதிய பிரதேசங்களைப் பெற்றதற்கும் அவர்கள் மகிழ்ச்சி கொண்டாடுவது இயல்பே. நமக்கு அதனால் விளைந்த லாபமென்ன? இங்கிலாந்தின் ஆபத்துக்காலத்தில் அதற்கு உதவி செய்தால் என்னவெல்லாமோ கொடுக்கப் படுமென்று வாக்குறுதி யளிக்கப்பட்டது. ஆனால் உண்மையில் என்ன பெற்றோம்? ரௌலட் சட்டம், இராணுவ அமுல், ஜலியன் வாலாபாக், மார்பால் ஊர்தல், முஸ்லிம் புண்ணிய ஸ்தலங்கள் சம்பந்தமாக லாயிட் ஜார்ஜின் வாக்குறுதி பங்கம், காந்தியின் சிறைவாசம், ஒரு ஷில்லிங் ஆறு பென்ஸ் நாணய மாற்று விகிதம், ஸைமன் கமிஷன், கடைசியாக நமது அருந் தலைவர்கள் அடிக்கப்பட்டது முதலியவை தான். எனவே இந்தயுத்த நிறுத்தினத்தை நாம் எத்தகைய உணர்ச்சிகளுடன் கொண்டாட முடியும்?

"பீபிள்"

### பர்க்கேன்ஹெட்டுக்கு ஒரு யோசனை

லார்டு பர்க்கென்ஹெட் சமீபத்தில் இந்திய மந்திரி பதவியினின்று விலகியதைப் பற்றிப் பேசுங்கால் டீன் இஞ்சு என்பார் "வருஷத்திற்கு 5000 பவுனுடனும் தேச நிர்வாகத்தில் உதவி செய்யும் சிறப்புடனும் திருப்தியடையாத ஒருவருக்கு அந்த ஐயாயிரம் பவுனே அதிகமாகும். அவரைப் போக விடுவதே நன்று" என்று கூறினார். இது குறித்து லார்டு பர்க்கென் ஹெட் அவர்மீது சீறிவிழுகிறார். டீன் இன்சு கூறியது உண்மையாயிருக்கலாம். ஆனால் லார்டு பர்க்கென் ஹெட்டு எரிந்து விழவேண்டிய அவசியமில்லை. அவர் தமது நாட்டுக்கும் ஊழியம் செய்து அதே சமயத்தில் தம் பணப்பெட்டியையும் நிரப்பிக் கொள்ள விரும்பினால் அடுத்த இராஜப்பிரதிநிதியாக இந்தியாவுக்கு வருவாராக. அப்படி வந்தால் வேலை குறைவாகவும், அதிகாரமும் ஆடம்பரமும் ஏராளமாகவும் அடையலாம். வருஷம் 20,000 பவுன் சம்பளம் பெறலாம். (இங்கிலாந்தில் அவருக்கு 5000 பவுன் கொடுக்க முணுமுணுக்கும் டீன் இத்தொகை இந்தியப் பொக்கிஷத்திலிருந்து கொடுக்கப்படுவதால் ஆட்சேபிக்க மாட்டாரென நம்புகிறோம்.) சொந்தப் பணத்தில் தம்பிடி செலவில்லாமல் அவர் அரண்மனைகளில் வசிக்கலாம்; சம்பிரமமான விருந்துகள் அருந்தலாம்; இன்னும் சுக போகக் களியாட்டங்களில் ஈடுபடலாம். சுதேச மன்னர்களின் தலை நகர்களுக்குப் போய் அவர்களைக் கௌரவிக்கவும், அவர்களுடைய தாழ்மையான பரிசில்களைப் பெற்றுக்கொண்டு, அவர்களைத் தமக்கு நன்றிக் கடன்படச் செய்யவும் சந்தர்ப்பங்கள் கிடைக்கும். 32 கோடி மக்கள்மீது அவர் ஆட்சி செலுத்தலாம். உத்தியோகத்திலிருந்து விலகி வீடு திரும்பும்போது செல்வத்திற் சிறந்த சீமானாய்ச் செல்லலாம். சாம்ராஜ்யத்திற்கும், இங்கிலாந்துக்கும், இந்தியாவுக்கும் மிகத்திறமையுடன் சுயநலத் தியாகம்செய்து அரிய ஊழியம் செய்தவரென்று போற்றப்படுவார். பத்திரிகைகளுக்குக் கட்டுரை வரைதல், கடைக்கணக்குப் புத்தகங்களைப் பரிசோதித்தல், ரசீதுகளில் கையொப்பமிடுதல் முதலிய தொல்லைதரும் வேலைகளை விடுத்து லார்டு பர்க்கென் ஹெட்டு இந்தியா போதருவாராக.

—"பீபிள்"


## கடவுள் காட்சியும் தாயுமானாரும்

திரு. வி. கலியாணசுந்தர முதலியார் இயற்றியது

மன மாசுகளை நல்லறிவால் கழுவி உண்மையில் மூழ்கி நின்ற அநுபூதிமான்களில் ஒருவராகிய தாயுமானார் அருளிச்செய்த "ஐவகை எனும் பூதம்" என்னும் திருப்பாட்டைப் பீடிகையாகக் கொண்டு இந்நூல் எழுதப்பட்டுளது. நூலின் திரண்ட கருத்து மெய்ம்மையில் கடவுள் காட்சி பெறலா மென்பது. விலை அணா 4. வேண்டுவோர் ஐந்து அணா ஸ்டாம்பு அனுப்பிப் பெற்றுக் கொள்ளலாம். ஏக காலத்தில் 12-புத்தகங்கள் வாங்குவோருக்குத் தபால் செலவு இனாம்.

முருகவேள் புத்தகசாலை,
இராயப்பேட்டை, சென்னை.

இனாம்! இனாம்!

உங்கள் விலாசத்தைத் தெரிவித்தால் எங்கள் புதிய கியாட்லாக்கை அனுப்புவோம். அத்துடன் ஒரு கியாலெண்டரும் வரும். உடனே எழுதுங்கள்.

ஒற்றுமை ஆபீஸ்,
சைதாப்பேட்டை, மதராஸ்.

மகாத்மா
காந்திஜோசியர்

தரும நியாயமான 5 கேள்விகளுக்கு ரூ. 1. மேல் ஒவ்வொரு கேள்விக்கும் அணா 4. கடிதம் எழுதும்போதன்ன நேரத்தைக் குறிப்பிடல் வேண்டும். எல்லாக் காரியங்களிலும் அனுகூலமான பலனைக் கொடுக்கும் "ஜய வசீகாணி" தாயத்து 1-க்கு ரூ. 2. ஸ்பெஷல் தாயத்து ரூ. 50. மற்ற விபரங்கட்கு நேரில் எழுதித் தெரிந்துகொள்ளவும்.

ஆஞ்சனேய ஸ்வாமி ஜோதிடாலயம்,
திருத்தணிகை, சித்தூர் ஜில்லா.
தந்தி விலாசம்:—ஹனுமான்.

பெட்ரோமாக்ஸ் லைட்

மாண்டில், குளோப், அதன் தனித்தனி சாமான்கள் எல்லாம் நயமாய் கிடைக்கும்

பூச்சிவண்டர்
கியாஸ் லைட்

உறுதியானது. ரிபேர் ஏற்படாதது. இந்த மேக்கர் மதராஸில் கிடைக்காது.

முழுவிபர கியட்லாக், ஒரு அணா ஸ்டாம்பு அனுப்பிப் பெற்றுக்கொள்ளவும்.

Importers—
ஸன் கம்பெனி, தஞ்சாவூர்.

ஆனந்த விகடன்

64-பக்கம் விஷயங்களுடன் மாதந்தோறும் வெளிவரும் பத்திரிகை. இதில் பல மேதாவிகளின் கட்டுரைகள் வெளி வருகின்றன. ஆனந்த விகடனின் ஒரு பக்கத்திற்கு ஒரு ரூபாய் கொடுக்கலாமென்று சொல்லுகிறார் ஒரு சந்தாதாரர். நீங்கள் ஒரு வருஷத்திற்கு 768-பக்கங்களுக்கு ஒருரூபாய் கொடுக்கக் கூடாதா?

தபால் கூலி யுள்பட இந்தியா, பர்மா.
விலோனுக்கு வருட சந்தா ரூ. 1 0 0
அயல்நாடுகளுக்கு முன்பணம் ,, 1 4 0
மாதிரி காபி இனாம்.

ஆனந்த விகடன் ஆபீஸ்,
244, தங்கசாலை வீதி, மதராஸ்.
டெலிபோன்: 3311.
தந்தி விலாசம்:—விகடன் சென்னை

வெள்ளி பஸ்பம்

வெள்ளை, வெட்டை, மூலங்கள், எறும்புருக்கி, நீரிழிவு, ஸ்திரீ சம்பந்த குன்மம் பெரும்பாடு எல்லாம் நீரும். தளர்ந்த தாது வலுக்கும். மற்ற நோய்களுக்கும் மருந்துண்டு. வியாதியின் விபரம் எழுதினால் தக்க பரிகாரம் மருந்துடன் தெரிவிக்கப்பெறும். 5 நாளில் நிச்சயம் குணம் தெரியும். 40 நாள் மருந்து ரூ. 5.

விலாசம்:—
சே. விசுவநாத செட்டியார்,
வைத்யம், லாலுகுடி, திருச்சி ஜில்லா.

## அரிய தமிழ் நூல்கள்

| | |
|---|---|
| **I ஞானம்** | |
| ஞானக் களஞ்சியம் | 3 0 0 |
| ஸ்ரீராம தீர்த்த விஜயம் 1 பாகம் | 1 4 0 |
| ,, 2 ,, | 3 12 0 |
| விருத்திப் பிரபாகரம் | 5 0 0 |
| சச்சிதானந்த சிவம் | 1 2 0 |
| **II தர்க்கம்** | |
| கிறிஸ்தமத கண்டனத்திரட்டு (18 அரிய நூல்களை உடையது) | 1 8 0 |
| அவைத சைவகண்டனம் (16 அரிய நூல்களை உடையது) | 3 8 0 |
| ,, 2-ம் பாகம் (7 அரிய நூல்களை உடையது) | 2 8 0 |
| சித்தாந்த இரத்தினாகரத்திரட்டு (8 அரிய நூல்களை உடையது.) | 8 4 0 |
| சித்தாந்த ஞான போதத்திரட்டு (8 அரிய நூல்களை உடையது) | 5 4 0 |
| இயேசுவின் இரகசியம் | 1 8 0 |
| **III பக்தி** | |
| பக்தலீலாம் ருதவசனம். 82 பக்திமான்கள் சரிதை, (மனதை உருக்குவது.) | 3 0 0 |
| ஸ்ரீ ராம கிருஷ்ண விஜயம் (உபதேசங்களுடன்.) | 1 12 0 |
| **IV கல்வி** | |
| தமிழ் இங்கிலீஷ் அகராதி | 2 0 0 |
| இங்கிலீஷ் தமிழ் அகராதி | 2 0 0 |
| ஆங்கில ஆசான் | 2 0 0 |
| மொழி நூல் (தமிழின் சிறப்பு இதனால் விளங்கும்) | 2 8 0 |
| **V மனோசாதனம்** | |
| மனோவசிய சாஸ்திரம் | 1 8 0 |
| ஜீவவசியம் பரம ரகசியம் | 3 0 0 |
| **VI வியாபாரம்** | |
| கைத்தொழில் வணிக இரகசியம் | 1 8 0 |
| வியாபார தந்திரம் | 1 8 0 |
| **VII காதல்** | |
| இல்வாழ்க்கையின் இரகசியங்கள் | 2 0 0 |
| முத்தத்தின் மர்மம் | 1 8 0 |

இன்னும் எவ்விதமான புத்தகங்கள் வேண்டுமானாலும் எமக்கு எழுதுங்கள்.

ஷண்முகம் அண்டு கோ,
161 பவழக்காரத்தெரு, சென்னை.

திருப்பூர் பனியன்கள்

எல்லா விதமான பனியன் தினுசுகளும் தயார் செய்யப்படுகின்றன.
விலை 32 இஞ்சு கார்டிகன்
டஜன் 1-க்கு 3—8—0.
மற்ற விலை விபர ஜாபிதாவுக்கு எழுதவும்.

The General Knitting Factory,
*Tirupur. (S. India)*

"சைவம்"

காற்றுள்ளபோதே தூற்றிக் கொள்ளுங்கள்.

அரிய சைவப் பத்திரிகை மிகக் குறைந்த விலைக்குக் கிடைக்கிறது. சென்னைச் சிவனடியார் திருக்கூட்டத்தார் பத்து வருடங்களாகச் சைவம் என்னும் மகுட நாமமுடைய மிகச் சிறந்த மாதப் பத்திரிகை யொன்றை வெளியிட்டு வந்தார்கள். இதில் பல சிவ சரித்திரங்கள், சிவனடியார் சரித்திரங்கள், பதிபசுபாச இலக்கணங்கள், விரதாதிகள், உற்சவாதிகள், தத்துவார்த்தங்கள், சைவ சித்தாந்த உண்மைகளை விளக்கும் வியாசங்கள், சிவஞானபோதத்திற்கு மிக எளிய உரை முதலியன மிக எளிய இனிய செந்தமிழ் நடையில் எழுதி வெளியிடப் பட்டுள்ளன. இப்பத்திரிகை சைவ சமயிகளுக்கு மிகவும் உபயோகமானது. இதன் வருடச் சந்தா ரூபா 1-8-0. சைவசமயிகள் போதிய ஆதரவு காட்டாத காரணத்தால் இப்பத்திரிகையை பத்தாம் வருடத்து இடையில் நிறுத்திவிட நேர்ந்தது. இதின் 2, 6-வது வருடப் பத்திரிகைகள் இப்போது கிடைக்க மாட்டா. 1-3-4-5-7-8-9-வது வருடப் பத்திரிகைகளும் 10-வது வருடப் பத்திரிகையிற் பாதியும் 50 பிரதி மட்டுமே கிடைக்கும். இவ்வேழு வருடப் பத்திரிகைகளையும் பத்தாவது வருடப் பத்திரிகையிற் பாதியும் மொத்தமாக வேண்டுவோர்க்கு தபாற் செலவு உள்பட ரூபா 4½-க்கு அனுப்பப்படும். இரண்டொரு வருடப் பத்திரிகை வேண்டுவோர் தபாற் செலவுட்பட ரூபா 1-2-0 வீதம் அனுப்புதல் வேண்டும்.

முருகவேள் புத்தகசாலை,
இராயப்பேட்டை, சென்னை.

# உலகக் காட்சி

## குருக்ஷேத்திரத்தில் சூரிய கிரகணம்

வட இந்தியாவில் சூரிய கிரகணத்தின் போது குருக்ஷேத்திரத்திலுள்ள தடாகத்தில் ஸ்நானம் செய்தால் பெரும் புண்ணியமெனக் கருதப்படுகிறது. எனவே, ஒவ்வொரு கிரகணத்தின்போதும் அங்கு லக்ஷக்கணக்கான ஜனங்கள் சேர்வதுண்டு. சென்றவாரம் நிகழ்ந்த சூரிய கிரகணத்தை முன்னிட்டு குருக்ஷேத்திரத்திற்கு சுமார் 5 லட்சஜனங்களுக்கு மேல் வந்திருந்தார்களாம். யாத்ரீகர்களைக் கொண்டு வருவதற்கும், திரும்பக்கொண்டு போவதற்கும் நூற்றுக்கணக்கான ஸ்பெஷல் ரயில் வண்டிகள் விடப்பட்டன. பிச்சைக்காரர்கள் 50 ஆயிரம் பேரும், ஜால வித்தைக்காரர்கள், குரங்காட்டிகள், மந்திரவாதிகள் முடிச்சுமாறிகள் முதலியோர் ஆயிரக்கணக்கிலும் வந்து சேர்ந்தனராம். கணக்கில்லாத களவுகள் நடைபெற்றன. புண்ணிய தீர்த்தத்தில் ஸ்நானம் செய்யும்போது கூட்ட மிகுதியினால் எவ்வளவோ பேர் தங்கள் ஆடைகளை இழந்தனர். இவ்விழாவின் போது நிகழ்ந்த மற்றொரு அபூர்வ சம்பவம் குறிப்பிடத்தக்கதாகும். கூட்டத்தில் பாம்பு ஒன்று புகுந்து ஆறு ஸ்திரீகளைக் கடித்துவிட்டது. தொண்டர்கள் அப்பாம்பைச் சுட்டுக் கொல்ல முயன்றார்கள். கிரகண காலமானமையால் பாம்பைக் கொல்லக் கூடாதென்று சனாதனதர்மிகள் சிலர் தடுத்தார்கள். இது காரணமாகப் பெருஞ் சண்டை யுண்டாகிப் பலர் காயமடைந்தனர். கிரகணத்துக்குப் பின்னர் ஜனங்கள் பெருங் கூட்டமாகச் சென்று ரயிலேற முயன்ற போது பந்தோபஸ்துக்காக வந்த போலீசார் அவர்களை அடித்துத் துன்புறுத்தியதாகச் சொல்லப்படுகிறது.

* * *

## பிராணிகளின் வேகம்

சமீபத்தில் மான் செஸ்டரில் ஒரு வேட்டை நாய் 28 விநாடியில் 500 கஜம் ஓடியதாம். இது விநாடிக்கு 18 கஜம் ஆகிறது. இந்த வேகத்தில் ஒரு மைல் தூரத்தை ஒரு நிமிஷம் 38 விநாடியில் கடக்கலாம். ஆனால் எந்தப் பிராணியும் ஒரு மைல் தூரம் இவ்வளவு வேகமாய் ஓடவே முடியாதாம். மணிக்கு 34 மைலுக்கு அதிகமான வேகத்துடன் ஒரு மைல் தூரம் எந்த வேட்டை நாயும் ஓடமுடியாதென்று சொல்லப்படுகிறது. ஆனால் இதனிலும் விரைவாக ஓடக்கூடிய பிராணி உலகிலேயே வேறொன்றுமில்லையாம். எறக்குறைய வேட்டைநாயுடன் போட்டி யிடக்கூடிய மிருகம் இந்தியாவின்சிறுத்தைப் புலியாகும். என்றாலும் இவ்விரண்டையும் இதுவரையில் போட்டிப் பந்தயம் விட்டுப் பார்க்கவில்லையாதலால் திட்டமாகச் சொல்ல முடியாது. வேட்டை நாய் பந்தயக் குதிரையை விடச் சிறிது அதிக வேக முள்ளதாம். பந்தயக் குதிரை இது வரையில் மணிக்கு 32 மைல் வேகத்துக்கு மேல் ஓடியது கிடையாது. இவற்றிற்கு அடுத்த படியில் வருவது வட அமெரிக்காவிலுள்ள ஒருவகைக் கலைமானாகும். இது ஓடும் போது நீண்ட தூரம் தாவித் தாவிக் குதித்துக்கொண்டு ஓடுமாம். நான்காவதாக, முயலைச் சொல்லலாம். முயல் வேகமாய் ஓடினால் மணிக்கு 28 மைல் வேகத்தில் ஓடக்கூடும். ஆனால் இவை யெல்லாம், முன்னமே சொன்னது போல், இந்த வேகத்தில் வெகு தூரம் ஓட முடியாது. ஒரே மூச்சில் நீண்ட தூரம் ஓடக்கூடிய பிராணி கானடாவிலுள்ள பயங்கர ஓநாயாகும். இம்மிருகம் மணிக்கு 20 மைல் வேகத்தில் மணிக்கணக்காக ஓடுமாம். ஒரே மூச்சில் 100 மைல் ஓடினாலும் களைப்புறுதாம். மனிதனுடைய மிகுதியான வேகம் மணிக்கு 21 மைல் ஆகும். ஆனால் இந்த வேகத்தில் நூறு கஜத்திற்குமேல் எவரும் ஓடியதில்லை. ஒரு மைல் தூரப் பந்தயங்களில் மணிக்கு 14 மைல் வேகந் தான் மிகவும் அதிகமாகும்.

* * *

## குழந்தையும் பாம்பும்

பாம்புகள் தங்களுக்கு யாரும் தீங்கு செய்யாவிட்டால் குழந்தைகளைக் கடிப்பதில்லையென்று இலங்கையில் நம்பப்படுவதாக, கெனத் மெக்கன்வி என்பார் 'ரெபரி' என்னும் பத்திரிகையில் எழுதுகிறார். தமது நண்பரான ஒரு பெண்மணியின் அநுபவத்தில் இந்நம்பிக்கை உண்மையானதாகவும் அவர் தெரிவிக்கிறார். அப்பெண்மணி ஒரு நாள் தனது தாதியிருக்கும் அறைக்குச் சென்று கட்டிலில் படுத்திருந்த தன் குழந்தையைப் பார்த்தாள். அப்போது அந்தக் கட்டிலின் காலை ஒரு நாகம் சுற்றிக் கொண்டிருப்பதைக் கண்டு திடுக்கிட்டாள். அந்தப் பாம்பு தன் படத்தை விரித்து இந்த அம்மாளைப் பார்த்ததாம். உடனே அவள் விரைந்தோடி ஆயாவை அழைத்து விஷயத்தைக் கூறிக் குழந்தையைக் காப்பதற் கென்செய்வது என்று கதறினாள். அதற்குத் தாதி "நாம் அதைப் பயமுறுத்தாமலும் அடிக்காமலு மிருப்பின், அது குழந்தையை ஒன்றும் செய்யாது. நமது சமையற்காரன் அப்புவைக் கூப்பிட்டு அதை வெளியே போகும்படி பிரார்த்திக்கச் சொல்கிறேன்" என்று அப்புவை அழைத்து வந்தாள். அப்பு பாம்பைக் கண்டதும், "இவ்வரவம் நம் பங்களாவின் ஒரு மூலையிலுள்ள புற்றிலிருப்பது. நெடு நாளாய்ப் பழகிய பாம்புதான். வெள்ளிக் கிழமையாகிய இன்று அதைக் கொன்றால் நமக்குப் பீடை வந்து சேரும்" என்று சொல்லியபிறகு பயபக்தியுடன் அதற்கு வணக்கஞ் செய்தான். அப்போது அவ்வரவம் தன் படத்தைத் தூக்கி இவனைப் பார்த்தது. உடனே அப்பு தமிழில் என்னமோ பேசி அதிவிரைவாக நமஸ்காரங்கள் செலுத்தினான். அச்சமயம் அம்மாசுணம் இந்த வேண்டுகோளை மிகவும் கண்யத்துடன் ஏற்றுக் கொண்டது போல் கட்டிலை விட்டிறங்கி ஒரு கதவின் வழியாகத் தோட்டத்தில் பிரவேசித்துத் தன் புற்றில் மறைந்து விட்டதாம்.

* * *

## பாதாள மாளிகை

எண்பது அடுக்கு மாளிகை - ஆனால் பூமிக்குமேல் எண்பது அடி உயரந்தான்! இத்தகைய பாதாள மாளிகை ஒன்று கட்ட ஜப்பானில் திட்டம் போட்டிருக்கிறார்கள். ஜப்பானில் பூகம்பங்களினால் அடிக்கடி நேர்ந்து வரும் தொல்லைகளைக் குறித்து நேயர்களுக்குத் தெரியும். பூமிக்குள்ளே கட்டிடம் கட்டிவிட்டால், பூகம்பத்தினால் ஒன்றும் செய்ய முடியா தென்னும் நம்பிக்கையின் பேரில் இம்மாளிகை கட்டப் போகிறார்கள். இம்மாளிகையின் எண்பதாவது அடுக்கு மட்டுமே பூமிக்கு மேலிருக்கும். பாக்கி 79 அடுக்குகளும் பூமிக்குக் கீழே இருக்கும். கட்டடத்தின் மொத்த உயரம் 1100 அடி. இயந்திர வணிகளும், அசுத்தக் காற்றை வெளி யேற்றித் தூய காற்றை உள்ளே விடும் கருவிகளும், டெலிபோன்கள், மின்சார விளக்குகள் முதலியனவும் இம்மாளிகையில் இருக்கும். மொத்தம் 20 லட்சம் பவுன் இக்கட்டிடத்திற்குப் பிடிக்குமென்று தெரிய வருகிறது.

* * *

## நுரையீரலில் வெடிகுண்டு

கானடாவைச் சேர்ந்த போர்வீரன் ஒருவனின் நுரையீரலில் சென்ற பத்து வருஷ காலமாகத் துப்பாக்கி குண்டு ஒன்று இருந்து வந்தது. யுத்தத்தின்போது இக்குண்டு அவன் மார்பில் பாய்ந்து நுரையீரலுக்குச் சென்றது. பின்னர் வெளிச் சதை மூடிக் குணமாகிவிட்டது. எக்ஸ்ரே மூலம் குண்டு இருக்குமிடம் முன்னமே கண்டுபிடிக்கப் பட்டதாயினும், அது சாவணத்தினால் எடுக்க முடியாத நிலையிலிருந்தது. கடைசியாகச் சில நாளைக்குமுன்பு அவன் மார்பின்மீது ஒரு காந்தக்கல்லை வைத்துக் குண்டைக்கலர்ந்து எடுக்கக்கூடிய இடத்துக்குக் கொண்டு வந்து பின்னர் எடுத்தார்களாம்.

* * *

## மணஉடை பிண உடையாயிற்று

அமெரிக்காவில் மிஸ் ஜோன் ஹார்னம் என்னும் அழகிய இளங்கன்னிகை தன் கலியாணத்துக்கென்று பணம் சேர்த்து வைத்திருந்தாள். ஆனால் அவள் காதலித்த இளைஞனைக் கலியாணம் செய்து கொள்ளக் கூடாதென்று அவள் தாயார் ஆட்சேபித்ததால் கலியாணம் நின்று போயிற்று. அதன்மேல் அவள் அந்தப் பணத்தையெல்லாம் செலவழித்து உயரிய ஆடைகள் வாங்கினாள். புரூக்ளின் என்னும் நகரில் ஓர் அறை வாடகைக்கெடுத்துக் கொண்டு கலியாணத்துக்கென்று குறிப்பிட்ட தேதியில் அங்கே போய்ச் சேர்ந்தாள். அவ்வாடைகளை யணிந்துகொண்டு அறையின் கதவுகளையும் பலகணிகளையும் மூடிவிட்டு ஆவிக்குழாயைத் திறந்தாள். மறுநாள் காலையில் வீட்டுக்குடையவர்கள் அறையின் கதவை உடைத்துத் திறந்து பார்த்த போது, உள்ளே அப்பெண் பிணமாய்க் கிடந்தாள். அவள் எழுதி வைத்திருந்த கடிதத்தில் "கலியாணத்துக்கென்று நான் பணம் சேர்த்திருந்தேன். பணம் அதற்குப் பயன் படவில்லை. ஆதலின் மரணத்தின் போதேனும் அலங்கரித்துக் கொள்ள வெண்ணி இவ்வுயர்ந்த உடைகளை வாங்கினேன்" என்று குறிப்பிட்டிருந்தாள்.


மகாத்மா காந்தியின் நூல்கள்

**சத்திய சோதனை**

அல்லது

**மகாத்மா காந்தியின் சுய சரிதம்**

மகாத்மாகாந்தி "எங் இந்தியா"வில் வாரந்தோறும் தமது சொந்த சரித்திரத்தை எழுதி வருவது யாவரும் அறிந்ததே. அவ்வற்புத சரித்திரத்தின் முதல் மூன்று பாகங்களின் தமிழ்மொழிபெயர்ப்பு தமிழ்நாட்டாரின் அதிர்ஷ்ட வசத்தினால் இப்போது வெளியாகி யிருக்கிறது. அரிய பெரிய நூல் என்றால் இதற்கே தகும். 476 பக்கங்கள் கொண்டது. சென்னை பிஷப்பாதிரியார் முதல் வெளிநாட்டு அறிஞர் பலரும் இதைப் போற்றிப் புகழ்ந்துள்ளார்கள். வாழ்க்கைக்கு உறுதுணையான இவ்விதிகாச நூல் தமிழகத்திலுள்ள ஒவ்வோர் இல்லத்திலும் அவசியம் இருத்தல் வேண்டும். விலை ரூ. 2 8 0

| | | |
|---|---|---|
| மங்கையர்க்கரசியின் காதல் முதலிய கதைகள் வா. வே. சு. ஐயர் எழுதியது | ,, | 0 12 0 |
| மகாத்மா காந்தி ரொமேன் ரோலெண்டு எழுதியது | ,, | 0 12 0 |
| ஆரோக்கிய வழி | ,, | 0 12 0 |
| நீதிதர்மம் | ,, | 0 2 0 |
| இந்திய சுயராஜ்யம் | ,, | 0 8 0 |

இராமகிருஷ்ண புத்தகசாலை,
65, வாலாஜா ரோட், மௌண்ட் ரோட்,
தபால் பெட்டி 386. சென்னை.



**விநாயகர் பனுவல் திரட்டு**

பாராயணஞ் செய்தற்குரிய சிறந்த நூல்

விநாயகக் கடவுள் சம்பந்தமாக ஆன்றோர் அருளிச் செய்துள்ள பல நூல்களினின்றும் திரட்டப்பட்டது. பூஜா காலங்களில் ஓதுதற்குரிய சிறந்த நூல். நல்ல காகிதத்தில் அச்சிடப்பட்டது. விலை அணா 6.

முருகவேள் புத்தகசாலை,
இராயப்பேட்டை, சென்னை.



**கணித ஜாதிடம்**

முக்கால பலன்களும் ஆராய்ந்து சொல்லப்படும்; ஜாதகம் இல்லாதவர்களுக்கும் அவரவருடைய பேர் நாமப்படிக்கும் ஆரூடப்படிக்கும் சரிவரப் பலன்களைச் சொல்லியும் தபாலில் அனுப்பிக்கவும் முடியும். ஜாதகம் உள்ளவர்கள் தங்களுடைய ஜாதகத்தை யாவது அல்லது ஜெனனமான வருஷ மாதம் கிழமை தேதி நேரம் முதலியவற்றை யாவது விபரமாய் எழுதி அனுப்பவேண்டும். ஜாதகம் இல்லாதவர்கள் தங்களுடைய முழுப்பெயரையும் கடிதம் எழுதும் நேரத்தையும் குறிப்பிட்டு எழுதவேண்டும். திசாபுக்தி படிக்கு இரண்டு வருஷப் பலன் எழுதியனுப்ப ரூ. 2-0-0. கிரகஸ்புடம் தசவர்க்கம் அங்கிசம் அவஸ்த்தை மண்டலம் சமயம் அங்குசம் தெரிந்து பலன் எழுத ரூ. 25. அந்தரம் பிரித்துப் பலன் எழுத லெட்டர் மூலமாவது அல்லது நேரிலாவது பேசிக் கொள்ளவேண்டும். ஜாதகத்தின் பலனைத் தெரிந்து சொல்ல ரூ. 1-0-0. பொருத்தம் பார்க்க ரூ. 1-0-0. ஜாதகக்குறிப்பு எழுத ரூ. 2-0-0. ஜாதகம் இல்லாத பெண் ஆண் இருவருக்கும் பொருத்தம் பார்க்க அவர்கள் முழுப் பெயரையும் கடிதம் எழுதும் நேரத்தையும் விபரமாய் எழுதவேண்டியது.

விலாசம் :— அப்பாஜி ஜோஸ்யர்,
நெ. 303, ஐரோட், திருவல்லிக்கேணி, மதராஸ்.



கும்பகோணம் தென் இந்தியா கன்பெக்ஷனரி பாக்டரியில் தயாரிக்கப்படும்

**பெப்பர்மெண்டையே உபயோகியுங்கள்**

**என் ?**

ஏன் எனில் இந்திய மூலதனத்தைக்கொண்டு இந்தியர்களால் நடத்தப்படும் தொழிற்சாலை இதுவே. வெகு நேர்த்தியானவை என்று புகழ்பெற்றது. விலை வெகு நயம். ஒரு முறை தருவித்துப்பாருங்கள். உண்மை விளங்கும். விலை விபரத்திற்கு உடனே எழுதுங்கள்.

THE SOUTHERN INDIA CONFECTIONERY FACTORY,
Kumbakonam,



**ஒரே ரூபாய்**

வாசனைகளிற் சிறந்தது எது?

**பிரெஞ்சு செண்டுகளே!**

ஜாஸ்மின், லில்லா, ரோஸ்
பெரிய புட்டி விலை ரூபா 2.
சிறிய புட்டி விலை ரூபா 1.
3 மாதிரி புட்டிகளின் விலை ரூபா 1-0-0.
தபாற் செலவு அணா 12 பிரத்தியேகம்.
நம்முடைய கேட்லாக்கிற்கு எழுதவும்.

லக்ஷ்மண பிரசாத் அண்டு கோ.,
(க) புதுச்சேரி.



புதியபதிப்பு ! புதியபதிப்பு ! !

**திருமூலர் திருமந்திரம்**

பலபிரதிகளுக்கிணங்கப் பரிசோதித்தும், சில அரும்பாடல்களை * இக்குறியிட்டு விளக்கியும் இறுதியில் செய்யுள் முதற்குறிப்பகராதி சேர்த்தும் நல்ல காகிதத்தில் அழகுபெற அச்சிட்டு காலிகோ பயிண்டு செய்யப்பட்டுள்ளது. விலை ரூபா 2-4-0.

முருகவேள் புத்தகசாலை,
இராயப்பேட்டை, சென்னை.





**தமிழ்த் தென்றல்**

திரு. வி. கலியாணசுந்தர முதலியார் அவர்கள் யாத்தது

தமிழ்நாட்டுப் பண்டைப் பெருமை, தாய்மொழிப் பற்று, பிறப்புரிமை, உரிமை வேட்கை, தேசபக்தி, சுயராஜ்யப்பேறு, ஒற்றுமை, சகோதர நேயம், ஊக்கம், காந்தியடிகள் அறம், ஒத்துழையா இயக்கச் சிறப்பு, அவ்வியக்க முறைகளால் நாட்டுக்குள்ள நலன் முதலிய பொருள்கள் இந்நூற்கண் ஆங்காங்கே மிளிர்தல் காணலாம். அணிந்துரையுடன் 480-பக்கங்கொண்டது. நல்ல காகிதத்தில் அழகிய எழுத்தில் அச்சிடப் பட்டுளது. காலிகோ பயிண்டு விலை ரூ. 2.

முருகவேள் புத்தகசாலை,
இராயப்பேட்டை, சென்னை.



**ஐந்து நிகரற்ற ஔஷதங்கள்**

| | | | |
|---|---|---|---|
| நயம் திபேத் கஸ்தூரி | தோலா 1-க்கு ரூ. | 40 0 0 |
| ,, குங்குமப்பூ | ,, ,, | 2 8 0 |
| ,, பச்சைக் கற்பூரம் | ,, ,, | 2 8 0 |
| ,, கோரோசனை | ,, ,, | 15 0 0 |
| காபூல் பால்காயம் 10 தோலா டின் 1-க்கு | ,, | 1 0 0 |

காசி வைரவர் கயறு

| | | |
|---|---|---|
| நெ. 1. | 100-க்கு விலை ரூ. | 2 8 0 |
| நெ. 2. | ,, | 2 0 0 |
| நெ. 3. | ,, | 1 8 0 |

பெரிய கேட்லாக் இனம் !

கே. எஸ். முத்தையா கம்பெனி,
ஸில்க் ஹவுஸ் : : ஸ்ரீ காசி.



**மின்சாரரசம்**

சகல வியாதிகட்கும் தேவாமிர்தம் போன்றது.

உங்களுக்கு எந்த விதமான நோய் - உபத்திரவம் - தொந்திரவு ஏற்பட்டாலும் உடனே மின்சார ரசத்தைத் துளிக் கணக்காக உபயோகித்து நிமிஷக் கணக்கில் குணம் பெறலாம்.

பத்திய : : : : : : மில்லை !
அநுபான : : : : : மில்லை !

N. S. வைத்தீஸ்வரய்யர்., B. A. வக்கீல், திருப்பூர் :— ** எனது காலில் ஒரு பெரிய விப்புருதி கட்டி வந்து நடக்க சக்தியற்று படுக்கையில் கிடந்தேன். பொறுக்க முடியாத வலி இருந்தது. மின்சார ரசத்தைத் தடவின உடனே வலி குறைந்தது. இரண்டொரு தினங்களில் பூரண சுகமடைந்தேன். **

A. G. முத்தையா B. A. தாசில்தார் கோவில்பட்டி :— ** இந்த ஔஷதம் ஒவ்வொரு குடும்பத்திலும் அவசியம் இருக்க வேண்டியது. டாக்டர்களுக்கு செலவிடும் பணத்தை இது மீதி செய்துவிடும். எல்லா வியாதிகட்கும் தேவாமிர்தம் போன்ற தென்ற பெயர் இந்த மருந்துக்கே தகும். **

D. P. சுந்தரேசன், B. A. மார்த்தாண்டம் :— ** மின்சார ரசத்தினால் இருமல், ஜல தோஷம், ஜுரம் இவைகள் உடனே நிவர்த்தியாயின. பல்லின் ஈரின் மேலிருந்த வீக்கம் மிகவும் ஆச்சரியகரமாக குணமடைந்ததற்காக வந்தனம். **

அதி அற்புதமான சிகிச்சை ! குணம் !

மின்சார ரசத்தினால் தீராத வியாதிகளே இல்லை யென்பது பல்லாயிரக் கணக்கான ஜனங்களின் அநுபவம்— நற்சாக்ஷிப் பத்திரங்கள் பெற்றிருக்கின்றன. கைகண்ட மருந்து.

உண்மை அறிய ஒரே முறை பரிக்ஷியுங்கள் !

எல்லா இடங்களிலும் கிடைக்கும்

புட்டி 1-க்கு ரூ. 2. தபாற் செலவு வேறு. கேட்லாக் இனம்.

விலாசம் :—
மின்சார ரசம் கம்பெனி, (லிட்) சேலம்.



ஹிமாலயத்திலிருந்து கன்னியா குமரிவரையில்

AMRUTANJAN / AMRUTAN[JAN] / Best Ind[ian] Pain Ba[lm] / Amrutanjan / BOMBAY, MA[DRAS]

**அமிருதாஞ்சனம்**

பெயர்பெற்றுவிட்டது

எல்லாவித நோய்களுக்கும், வலிகளுக்கும் அரிய குடும்ப ஔஷதம்

அமிர்தாஞ்சன் டிபோ,
மதராஸ் அண்டு பம்பாய்.



வெளி வந்து விட்டது! வெளி வந்துவிட்டது!

**துரதிர்ஷ்ட இந்தியா**

என்னும் அருமையான நூல் வெளி வந்து விட்டது
கன்னி மேயோ என்னும் அமெரிக்க மாதின் "இந்திய மாதா"வுக்கு சரியான மறுப்பெழுதத் தகுந்த :—
உத்தமர் இந்த உலகத்தில் யார் ?

**பாஞ்சாலச் சிங்கம் லாலா லஜபதிராய் தான்**

பெரிய புத்தகம், காலிக்கோ பயிண்டு. 38 அத்தியாயங்களில் தக்க ஆதாரத்துடன் பதிலளித்திருக்கிறார்.

கன்னிமேயோ ஊர்வம்பர் பேச்சையும், கட்டுக்கதைகளையும், ஆதாரமாகக் கொண்டே நூல் எழுதினர். நமது சிங்கமோ தான் கூறும் ஒவ்வொரு வார்த்தைக்கும், சர்க்கார் தஸ்தா வேஜிகளிலிருந்தும், மேனாட்டார் நூல்களிலிருந்தும், மேற்கோள் காட்டியிருக்கிறார். இந்தியர்களுக்கு உறுதுணையான ஒரு அழிவிலா கிரந்தமாகும். கிறிஸ்தவர்களுக்கு பைபிளும், முஸ்லீம்களுக்கு குர்ஆனும், ஹிந்துக்களுக்கு பகவத்கீதையும் எவ்வளவு முக்கியமோ அவ்வளவுக்கு இந்திய மாதாவிடம் உண்மை பக்தியுடைய பாரத புத்திரர்களுக்கு இந்த துரதிஷ்ட இந்தியாவும் முக்கியமானதாகும். உடனே ஒரு புஸ்தகத்துக்கு ஆர்டர் செய்யுங்கள்.

இதன் விலை ரூ. 2 8 0.

மானேஜர் :— முத்தையா புக் டிப்போ,
தபால் பெட்டி 99, சென்னை.



அதிஆச்சரியம் !
மூளைக்கும் தேகத்துக்கும் பலத்தைக் கொடுக்கும் நமது

**மணித் தைலத்தை**

உபயோகப்படுத்தினால் நல்ல ஞாபகசக்தியுண்டாகும்; மயிர் உதிராது. ஓர் இன்பமான குளிர்ச்சி உண்டாகும்.

5 தோலாகொண்ட புட்டி ஒன்றின் விலை ரூபா 1. விவரங்களுக்குக் காட்லாக்கைப் பார்க்க. காட்லாக் வேண்டுவோர்க்குத் தபாற் செலவின்றி இனமாக அனுப்பப்படும்.

ஆதங்க நிக்ரஹ ஔஷதாலயம்,
நெ. 26, பிராட்வே, மதராஸ்.



பொடியிற் சிறந்தது ராஜன் பட்டணம் பொடி

**ஆர். எஸ். சுகந்த மூக்குத்தூள்**

விலை விவரங்களுக்கும் மற்றும் எங்களிடம் தயாராகும் தினுசுகளுக்கும் எழுதவும்.

தந்தி விலாசம் :— "கஸ்யம்."
பி. வி. ராஜன் & கம்பெனி,
நெ. 44, கோவிந்தப்ப நாயக்கன் தெரு, ஜ. மதராஸ்.



நஞ்சன்கூடு, பிஷக்ரத்ன ஆயுர்வேத வித்வான் பி. வி. பண்டிட்ஸ்

**"சத் வைத்தியசாலை"** (ஆயுர்வேத ஔஷத பாக்டெரி), நஞ்சன்கூடு.

"நஞ்சன்கூடு பல்பொடி," "ஆமோதினி" த்ராக மாத்திரை, சாவனப்ராசா, கஸ்தூரி, கோரோஜனை மாத்திரை, பிருங்காமலக தைலம்.
(குழந்தைகளுக்கும், ஸ்திரீகளுக்கும் நம்பிக்கையுள்ள மருந்துகள்.)

ஸோல் ஏஜெண்ட்ஸ் :— யுனைடெட் கன்ஸர்ன், 54, பந்தர் தெரு, மதராஸ். (முக்கிய ஊர்களில் ஏஜெண்டுகள்.

## சுவாசகாச சம்மாரி

இது இறைப்புசுவாசகாச மென்னும் கொடிய சண்டாள வியாதியை வேரோடு போக்கிவிடுகிறது. மேற்கண்ட நோய், தாய் தந்தை வழியாகக் கண்டிருந்தாலும், மேக சம்பந்தமாகக் கண்டிருந்தாலும், எலிகடி நாய்கடி முதலிய விஷத்தால் கண்டிருந்தாலும், இருக்குமிடந் தெரியாமல் பறந்து போகிறது. மூடுபனி காலத்திலும் மழை காலத்திலும் இரவில் கண் விழித்தலாலும் இராக்காலத்தில் சீதள பண்டங்கள் சாப்பிடலானும் நெஞ்சில் சளி கட்டிக்கொர்கொர் என இழுத்துக்கொண்டு வியாதி யுறுவோர் இதனால் மிக்க நலமடையலாம். இராக்காலத்தில் தாருட்யம் செய்தலால் கடுகளவும் நித்திரையில்லாமல் கண்ணீருங்கையுமாயிருப்பவர்கள் பூரணசுகம் பெறுவார்கள். 12-மாத்திரை கொண்ட புட்டிக்கு ரூபா 10. 6-மாத்திரை புட்டி ரூபா 5. 3-மாத்திரை ரூபா 3 ஆண் பெண், சிறுவர் ஆகிய எல்லோருக்கும் ஏற்றது.

V. A. M. சுவாமி பண்டிட்,
கெ. 102, பிராட்வே, மதராஸ்.

---

## கந்தபுராணச்சுருக்கம்

### மூலமும் பொழிப்புரையும் விருத்தியும்

இந்நூல் ஸ்ரீமத் - சம்பந்தசரணாலய சுவாமிகளால் சொற்சுவை, பொருட்சுவை, சந்தச்சுவை முதலியன ததும்ப 1000 பாடல்களாகப் பாடப்பட்டது. கடல்போல் பரந்துகிடக்கும் பெரிய கந்தபுராணக் கதையை இனிது விளக்குவது. மூலத்திற்கேற்ற பொழிப்புரையும், விருத்தியும் பல்நூற் பிரமாணங்களுடன் எழுதப்பட்டுள்ளன. டிம்மி 8-பக்க அளவில் நல்ல காகிதத்தில் அச்சிடப்பட்டது. 496 பக்கம் கொண்டது.

காலிகோ பயிண்டு விலை ரூ. 3.

முருகவேள் புத்தகசாலை,
இராயப்பேட்டை, சென்னை.

---

## கணித சோதிடம்

பாகித கணிதப்படி கணிதஞ் செய்து பலன்கள் கூறப்படும். ஒரு வருஷத்திற்கு மாதவாரி பலன்கள் நுட்பமாயும் விவரமாயும் எழுதி அனுப்ப ரூபாய் இரண்டு. ஆருடம் 5 கேள்விகளுக்கு விவரமான பதில் எழுதி அனுப்ப ரூபாய் ஒன்று. விவாக விஷயம் ரூபாய் ஒன்று. விவாக விஷயத்தைப் பற்றி நாங்கள் எழுதி அனுப்பு புருஷ கொண்டு பெண்ணுக்குப் புருஷனும் வெகுனுக்குப் பெண்ணும் இன்னுரென்று அரும் சுலபமாய் நிச்சயிக்கலாம். எங்களிடம்வுள்ள மையான பூர்வீக ஜோதிடநூற்கள் பலவதைதால், நாங்கள் எழுதி அனுப்பும் பலன்கள் பொதுப் பலன்களா யிராமல் விவரமாகவும் சாஸ்திரீகமாகவு மிருக்கும். உங்கள் ஜாதக நகலாவதுகடிதம் எழுதும் நேரத்தையாவது தெரிவியுங்கள்.

தே. ஆறுமுக செட்டி,
முதலியார் பேட்டை, புதச்சேரி.

---

எங்கள் விசேஷகுறைந்த விலை விற்பனை
### டேபில் டைம்பீஸ் இனும்!!

எங்கள் 22 காரட் ரோல்ட் கோல்ட் "கோல்டன் கைக்கெடியாரம் வாங்குகிறவர்களுக்கு மேஜையின் பேரில் வைக்கக் கூடிய ஒரு அழகான டேபிள் டயம்பீஸ் இனாமாக சேர்த்து அனுப்பப்படும். இரண்டும் 5 வருஷம் உத்திரவாதம். முந்துங்கள். விலை ரூ. 5-15-0. தபால் கூலி பிரத்தியேகம்.

ஜீனன் வாட்சு கம்பெனி,
மிண்டு பில்டிங்ஸ் போஸ்டு, மதராஸ்

---

## ஆனந்தபோதினி

இனிய தமிழில் வெளிவரும் மாதப்பத்திரிகை; தமிழ்நாட்டில் வெளிவரும் மாதச் சஞ்சிகைகளில் முதன்மை பெற்றது; 20,000 சந்தாதாரர்களை யுடையது; கல்வியிற் சிறந்தோர் பலரால் எழுதப்பட்டு வரும் உயர்ந்த வியாசங்களைக் கொண்டு வெளிவருவது; எம்மதத்தார்கும் சம்மதமான பொது நன்மைகளைப் போதிப்பது; 64-பக்கங் கொண்டது; முகப்பு ஆப்டோன் படத்துடனும், லயன் பிளாக்குகளுடனும் மாதந்தோறும் குறித்த தேதி தவறாமல் வெளியாகிப் பலர்க்கும் ஆனந்தத்தை யூட்டி வருவது; மிகக்குறைந்த சந்தாத் தொகையுள்ளது.

மாதிரிகாபி இனும்.

வருட சந்தா தபாற்கூலி யுள்பட } உள்நாடு ரூ. 1 0 0 / வெளிநாடு ரூ. 1 4 0

விலாசம்:- ஆனந்தபோதினி ஆபீஸ்,
6, வெங்கடேச மேஸ்திரி வீதி, மதராஸ்.

---

## ஆச்சர்ய ஜோதிடம்

இப்ரதேசத்தில் ஜோதிட, சாஸ்திரத்தில் மகா ப்ரக்யாதி பெற்று பூரணமான அநுபவ ஞானமுள்ள ஜோதிட சாஸ்திரத்தை அநுசரித்து பூதபவுஷ்ய வர்த்தமானங்களை நன்றாக பரீக்ஷித்து அநுபவ கிரந்தங்களை யொட்டி ஜாதகன் மாதரு கர்ப்பத்திலிருந்து பிரவேசிக்கும்போது அவரவர் லலாடத்தில் பிரம்மதேவரால் எது எழுதி இருக்கப்பட்டதோ அதை ஹோரா சாஸ்திர ஞானத்தை நிர்மல நேத்திரத்தால் கிரஹித்து அவரவர்களுக்குப் பலன்கள் எழுதப்படும்.

உங்கள் எதிர்காலப் பலனை தெரிந்து பதில் எழுதி 5 கேள்விகளுக்கு 1-0-0 மேல் தனி கேள்விகளுக்கு 0-4-0 ஒரு வருஷம் மாத வாரியாகப் பலன் எழுத 2-0-0 நஷ்ட ஜாதகம் குறிக்க 5-0-0 ஜாதக நகலாவது கடிதம் எழுதும் போதுள்ள நேரத்தையாவது குறிப்பிட்டு எழுதவேண்டியது. V. P. P. சார்ஜ் வேறு.

ஜயவரப்ரசாத ரக்ஷை 1-க்கு 2-8-0

இது சாஸ்திர முறைப்படி ஜபஹோமங்களால் தயார் செய்யப்பட்டது. வியாபார விர்த்தி உத்தியோக உயர்வு அதிகாரிகளின் விஸ்வாசம் வியாஜ்யத்தில் ஜயம் இன்னும் நாம் கோரியது கைமேல் பலனாகும்.

N. B—பினங்கு, சிங்கப்பூர், மலாய் நாடுகளில் இருந்து ஆர்டர் செய்யும் நண்பர்கள் முன் பணமாக அனுப்பவேண்டியது.

மானேஜர் :—ஸ்ரீ சிவ சுப்பிரமணிய ஜோதிட நிலயம்,
திருத்தணி, சித்தூர் ஜில்லா, S. India.

---

## பெரிய குறைந்த விலை விற்பனை

ரூ. 4-8-0 அனுப்பினால், 3 தங்கச் சங்கிலி, இமிடேஷன் வைரமோதிரம் ஷர்ட்டு பொத்தான்கள், ஒரு செட், ஒரு பவுண்டன் பேனா, ஒரு கிளிப், 5வரு உத்திரவாதமுள்ள தங்க மூடியுள்ள பாக்கட் கெடியாரம் முதலியன கிடைக்கும்.

Apply to:
NATHJEE & Co.,
3, Kartick Base's Lane,
Beadon Street P. O. Calcutta.

---

தமிழ்ப்பேராசிரியர்
மாகறல்-கார்த்திகேய முதலியார் அவர்கள்
இயற்றிய

## மொழி நூல்
### (PHILOLOGY)

இந்நூல் பண்டைத் தமிழ் நூலாராய்ச்சி செய்வோருக்கும், சரித்திர ஆராய்ச்சிக்காரருக்கும் பெரும்பயன் தருவது. இந்நூற் பொருள் விளக்கம் :—(க) காதமென்பதனளவு, (௨) கணன விதி, (௩) தொல்காப்பியர் காலம், (௪) ஒலியும் எழுத்துமொன்றுபடல், (௫) இயலொலி, (௬) சொற்றொடரழகு, (௭) தமிழின் பழமை (அ) தமிழாசிரியர்கள், (௯) செந்தமிழ், (௧0) தமிழ்வேறு திராவிடம் வேறு, (௧௧) மலையாளத்தின் தோற்றம், (௧௨) பாஷைகளின் வளர்ச்சி, (௧௩) மணிப்பிரவாளம், (௧௪) பாளி, (௧௫) தமிழ் வேதாகமங்கள், (௧௬) இசைக்கல்வி, (௧௭) குறிஞ்சியின் பெருமை, (௧அ) முதற்படைப்பு, (௧௯) கைக்குறி முதலியன, (௨0) சூரியன் கோள்களுக்கு நடுவினன், (௨௧) மக்கட்கூட்டம் ஒன்று, (௨௨) பழந்தமிழ்க்காலம் (௨௩) தமிழ்க்காரணம், (௨௪) கவனிப்பு.

விலை ரூ. 2.

முருகவேள் புத்தகசாலை,
இராயப்பேட்டை, சென்னை.

---

## சிந்தாமணி லேகியம்

புருஷர்களுடைய நபும்ஸகம் அல்லது பேடித்தனம் என்னும் துக்ககரமான கொடிய வியாதியை அடியோடு தொலைக்கச் செய்வதில் இந்தச் சிந்தாமணி லேகியமானது மிகச் சிறந்தது. மேகவெட்டை சம்பந்தமான வியாதிகளை இந்த லேகியமானது பத்தே வேளையில் முழுதும் குணமாக்கி நரம்புகளுக்கு மிக முறுக்கேற்றிச் சக்தியைத் தருவதில் இதற்குமிஞ்சின லேகியம் வேறொன்றில்லை என்று நாம் உறுதியாகச் சொல்வோம். இளைத்த தேகத்தை புஷ்டியாக்கி, கைகால் ஓச்சல் இடுப்பு விட்டுப் போதல், மேக வாய்வு ஸ்திரீகளின லுண்டான கொடிய வியாதிகளைக் கண்டித்து தினந்தோறும் மலத்தைப் போக்கி, தேகத்துக்கு வலிமையும் இந்திரிய புஷ்டியையும் இழந்து போன சுகத்தைத் திருப்பித் திருப்பிக் கொடுப்பதில் இந்த சிந்தாமணி லேகியமானது முதன்மையானதென்பதை எமது அனுபவத்தில் கண்டு தீர்மானித்திருக்கிறோம்.

| | | |
|---|---|---|
| 24 நாள் உபயோகம் | .... .... | 2 8 0 |
| 18 நாள் உபயோகம் | .... .... | 5 0 0 |

எம். எஸ். ராஜவைத்திய பண்டிதர்,
31, பாபுராய்க்கன் தெரு, பொம்பூர் பாரக்ஸ், மதராஸ்.

---

அதியற்புத நூல் வெளி வந்துவிட்டது

## முத்தத்தின் மர்மங்கள்

இதில் மங்கையரை அழகு பெற முத்தமிடும் 1000 வகைகளும், முத்தத்தின் வரலாறு, அதன் சிறப்பும், உலகில் முதலில் முத்தமிட்டது ஆணா, பெண்ணா என்றும், காதலர்களின் முத்தத்தின் தன்மையும் தபால், தந்தி, டெலிபோன் மூலமாய் முத்தமிடுவதெப்படி என்கிற விபரங்களும் முத்தத்தினால் வரும் அதிர்ஷடமும், துரதிர்ஷ்டமும், மேல் நாடுகளில் முத்தமிடும் இரகசிய முறைகளும், அவற்றிற்குப் பொருத்தமான மனத்தையும் கண்ணையும் கவரும் ஆப்டோன் படங்கள் அநேகம் சேர்க்கப்பட்டிருக்கின்றன. புஸ்தகம் விலை ரூ. 1-8.

மாணிக்க விலாசம் பிரஸ்,
அருணாசல முதலி வீதி, மதராஸ்.

---



## யௌவனம்

என்னும் பொக்கிஷத்தையும் ஆரோக்கிய மென்னும் குன்றாத செல்வத்தையும் விரும்பும் ஒவ்வொரு ஸ்திரீயும் புருஷனும் இப்புத்தகத்தை வாசித்து சுகமடையலாம்.

ராஜவைத்திய நாராயணஜீ கேசவஜீ,
1/94, சைனாபஜார், மதராஸ்.

---

தமிழ் நாடெங்கும் புகழ்வாய்ந்த எங்கள் நிகரிலாத
"ஆனந்த குணபோதினி"
ஆடிமாத முதல் ஆங்கில மாத சஞ்சிகைகளை யொப்ப நவீன நாகரிக உருவுடன்

## அமிர்த குணபோதினி

என்னும் புதிய பெயர் தாங்கிப் புதுவிதமாக
வெளிவருகின்றது.

3-வது ஆண்டு] [3-வது ஆண்டு

பிரபல ஆசிரியர் ஸ்ரீமான் S. G. இராமாநுஜலு நாயுடு அவர்களால் இப்பத்திரிகை எழுதப்பட்டு வருகிறது.

அநுபவ ஞான போதனையில் இதுபோன்ற முதன்மையான மாத சஞ்சிகை வேறில்லை. கௌரவமான விகடம் இப்பத்திரிகை யொன்றில்தான் காணலாம். இதுவே விவேகசாரம், இதுவே ஜகவிநோதினி, இதுவே விசித்திர விலாஸம், இதுவே விகடப் பொக்கிஷம், இதுவே அநுபவஞானவாரிதி, இதுவே அற்புத ஞான போதகம், இதுவே ஆச்சரிய சிந்தாமணி, இதுவே ஆநந்த தீபம் என்று எண்ணலாம். பதினாயிரம் சந்தாதாரர்களை உடையது. இன்னும் பல்லாயிரம் சந்தாதாரர்கள் தேவை. பார்க்க அழகாய், படிக்க இனிமையாய், நினைக்க மனோகரமாயிருப்பது எது? எங்கள் "அமிர்த குணபோதினி"யே. 56 பக்கங்களுடனும் ஒரே ரூபாயைச் சந்தாவாகக்கொண்டுள்ள உயரிய மாதப் பத்திரிகை தமிழ் நாட்டில் இது ஒன்றே தான். இதற்கு சமமான தமிழ் மாதப் பத்திரிகை எதுவுமே கிடையாது. இது யாவரும் அறிந்த விஷயமே. வருஷ சந்தா ரூபாய் ஒன்றே. வெளி நாடு ரூ. 1 4 0. மாதிரி காப்பி இனாம்.

தி. இராஜ கோபால் முதலியார், அமிர்த குணபோதினி ஆபீஸ், 302, தங்கசாலை வீதி, சென்னை.

Printed and Published by T. V. Kalyanasundaran (Editor) at the Sadhu Press, 12-Ganapathi Mudaly St., Royapettah, Madras.

